


பார்த்திப௵ ஆனி௴ 4௳ (17-6-45)

# சர்ச்சில் பிரகடனம்



சென்ற வாரம் பிரிட்டிஷ் பிரதம மந்திரி மிஸ்டர் சர்ச்சிலின் தேர்தல் பிரகடனம் வெளியாயிற்று. 80,00 வார்த்தைகளை எண்ணிப் பொறுக்கித் தொகுத்து வெளியிட்ட பிரகடனம்! இந்த ஒப்பற்ற பிரகடனத்தை அலசித் துருவிப்பார்ப்போமாயின் ஏமாற்ற உணர்ச்சியே வலுவடையும். ஒவ்வொரு அம்சத்திலும் அதிருப்தியைத் தரும் வகையில் அதை அவர் அமைத்திருக்கிறார். ஏகாதிபத்திய வெறி அவரைக் கொஞ்சமாவது விட்டகன்றதாகப் பிரகடனத்திலிருந்து தெரியவில்லை. அதன்போக்கு முழுவதும் சர்ச்சிலின் பழைய மனோபாவத்தையே தெளிவாக்கிக் காட்டுவதாயிருக்கிறது.

பதவிக்கு மீண்டும் வரவேண்டுமென்ற ஆசை இருக்கிறதல்லவா? எனவே அவர் இந்தியாவைப்பற்றியும் பிரஸ்தாபம் செய்திருக்கிறார் பிரகடனத்தில்.

“குடியேற்ற நாட்டந்தஸ்தை எய்துவதற்கு இந்தியாவுக்குப் பூர்ணமான சந்தர்ப்பமளிக்க வேண்டும்” என்ற சொல் தொடர் அவரது பிரகடனத்தில் இடம் பெற்றிருக்கிறது. இது எப்போது? எப்படி? என்பதுபற்றி பேச்சு மூச்சே காணோம். இந்திய வைஸ்ராய் வேவல் பிரபுதான் இதைப்பற்றிச் சொல்லிவிடுவாரே நாம் வேறு எதற்கு இப்போது இதைப் பிரஸ்தாபிக்க வேண்டும் என்ற எண்ணமே இதற்குக் காரணமாக இருந்திருக்கலாம். வேவல் பிரபுவின் திட்டத்தின் அருமை பெருமைகளும் அதனால் ஏற்படக்கூடிய பலாபலன்களும் விரைவில் வெட்ட வெளிச்சமாகிவிடும். மிஸ்டர் சர்ச்சில் வழக்கம்போல இந்திய வீரர்களின் தீரத்தை மெச்சிப் புகழ்ந்திருக்கிறார். அவர்களது சேவைக்கு அபாரமாக நன்றியும் பாராட்டுகிறார்.




அதே மூச்சில் மைனாரிட்டி, சமஸ்தான மன்னர்கள் இவர்களது பிரச்னையையும் முன்னுக்குக் கொண்டு வந்து நிறுத்தியுள்ளார். இதற்கான பொருள் என்னவென்பதை இந்தியர்களும், ஏனைய நாட்டவரும் எளிதில் புரிந்து கொள்வர். இந்தியாவிலுள்ள உண்மை நிலைமையை அவர் உணராததற்கு இதைவிட வேறு உதாரணம் தேவையே இல்லை. செய்நன்றியை மறவாத தன்மை, நேசப் பற்று இவையெல்லாம் சர்ச்சிலுக்கு விசேஷ யோக்கியதாம்சங்களாகவிருக்கலாம். ஆனால் ஒரு விஷயத்தை அவர் மறப்பதற்கில்லை. பேச்சைக் கொண்டே இந்தியரை மயக்கி, மழுங்கிப் போகச் செய்யலாமென்ற அவரது பிரமை இனியும் செல்லாது. சுதந்திரம் இந்தியாவின் பிறப்புரிமை. இதை தன்னிஷ்டப்படி கொடுக்கவோ, மறுக்கவோ முடியும் என்று பிரிட்டன் நினைப்பின் அது அரசியல் ஞான சூன்யத்தைத்தான் காட்டும். இந்திய ராணுவத்திற்குச் சமஸ்தானத்திலிருந்துமட்டுமோ அல்லது மைனாரிட்டி கோஷ்டிகளிடமிருந்தோ ஆட்கள் சேர்க்கப்படவில்லை. அப்படியேயிருப்பினும் மேற்படி இருதரத்தாரும் இந்தியா சுயவாட்சி பெற வேண்டுமென்பதையே வற்புறுத்துகின்றனர். இதில் தாமதமும் கூடாது. பேச்சை நம்பி ஏமாந்து நிற்கும் காலம் மலையேறிவிட்டது. உருவான செயலால் தான் பேச்சுக்கு மதிப்பு ஊட்ட முடியும். பிரிட்டனின் சொல், செயலுக்குப் பொருத்தமானதா வென்பது வேவல் வெளியிடும் திட்டத்திலிருந்து தெளிவாகலாம்.

# தூது வெற்றியடைந்தது

ஜனாதிபதியின் விசேஷத் தூதராக மாஸ்கோ சென்றிருந்த ஹேரி ஹாப்கின்ஸ் மார்ஷல் ஸ்டாலினுடன் சம்பாஷணைகளை நடத்திய பிறகு வாஷிங்டனுக்கு திரும்பி வந்துவிட்டார். பிரிஸ்கோவில் ரஷ்யாவின் ஆட்சேபங்கள் மறைந்ததற்குக் காரணம் அவரது தூதின் வெற்றியே என்றுகூறப்படுகிறது. சீக்கிரத்திலேயே மூன்று பெரிய தலைவர்கள் சந்திப்பு நடப்பதற்கான இறுதி திட்டத்தையும் அவர் கொண்டுவந்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. சந்திப்பு தேதி, இடம் இரண்டையும் மார்ஷல் ஸ்டாலின் குறிப்பிட்டிருப்பதாகவும் கூறப்படுகிறது.

போலிஷ் இடைக்கால சர்க்காரைத் திருத்தியமைப்பது பற்றி மாஸ்கோவில் விவாதிக்க போலந்திலும் வெளியிலுமுள்ள 12 போலிஷ் தலைவர்கள் அழைக்கப்பட்டிருப்பதாக மூன்று தலைநகர்களிலிருந்து ஏககாலத்தில் அறிவிக்கப்பட்டது. ஹாப்கின்ஸ் தூதின் வெற்றியே இதற்கும் காரணம் என்று கூறப்படுகிறது.

## பிரிஸ்கோவில் சமரஸம்

ஸான் பிரான்ஸிஸ்கோவில் உலக பந்தோபஸ்து ஸ்தாபனத்தை அமைக்க நேசநாட்டுப் பிரதிநிதிகள் கூடி ஐந்து வாரங்களாகின்றன. இடையே முளைத்த பல தகராறுகள், வல்லரசுகள் பரஸ்பரம் விட்டுக்கொடுப்பதன் மூலம் மறைந்தன. ஸான் பிரான்ஸிஸ்கோ மகாநாட்டை ராஜி மகாநாடென்றே சொல்லவேண்டும் என்று இந்தியத் தூது கோஷ்டித் தலைவரும் மூக்கிய பொருளாதாரக் கமிட்டி அக்கிராஸனருமான ஸர் ராமஸ்வாமி முதலியார் கூறுவது பொருந்தும். பெரிய வல்லரசுகளின் நிராகரிப்பு உரிமை விஷயத்திலும், தர்மகர்த்தா திட்ட விஷயத்திலும் ஐந்து பெரிய வல்லரசுகளிடையே அபிப்பிராய பேதம் நீடித்திருந்தது. நிராகரிப்பு உரிமை விஷயத்தில் ரஷ்யா விலகி விடுமோ என்றுகூட பலர் அஞ்சினர்கள். கடைசியில் ஸோவியத் யூனியன் விட்டுக்கொடுத்துவிட்டது. நடவடிக்கை முறை பற்றிய விஷயங்களில் நிராகரிப்பு அதிகாரத்தை பெரிய வல்லரசுகள் உபயோகிக்க வேண்டியதில்லை. ஒரு நாட்டின் மீது ராணுவ நடவடிக்கை எடுக்கும்பொழுது மாத்திரம் வல்லரசுகள் தங்களுடைய நிராகரிப்பு உரிமையை உபயோகித்தால் போதும் என்பது ரஷ்யா தவிர மற்ற நான்கு வல்லரசுகளின் வாதம். இந்த வாதத்தை கடைசியில் ரஷ்யா ஒப்புக்கொண்டுவிட்டதாகத் தெரிகிறது. இனி, ஒரு தகராறு பந்தோபஸ்துக் கௌன்ஸில் முன் விவாதத்துக்கு வருவதை எந்த வல்லரசும் தடுக்க முடியாது. வல்லரசுகளுக்கு நிராகரிப்பு அதிகாரமே இருக்கக்கூடாது என்று சிறிய நாடுகள் வாதிக்கின்றன. தர்மகர்த்தா விஷயத்திலும் ரஷ்யா விட்டுக்கொடுத்துவிட்டது.

லெவாண்டில் பிரெஞ்சு துருப்புகளுக்கும், உள்நாட்டினருக்குமிடையே மூண்ட சண்டை பிரிட்டிஷ் சர்க்கார் குறுக்கிட்டதனால் நின்றுவிட்டது. பிரிட்டிஷ் சர்க்கார் குறுக்கிடுமுன்பே, தாங்கள் சண்டையை நிறுத்திக்கொண்டுவிட்டதாக பிரெஞ்சுக்காரர்கள் கூறிவருவதை மத்திய கிழக்கிலுள்ள பிரிட்டிஷ் மந்திரி மறுத்திருக்கிறார். மத்திய கிழக்குப் பிரச்னையை ஐந்து வல்லரசுகளின் விவாதத்துக்கு விட பிரான்ஸ் சம்மதிக்கிறது. ரஷ்யாவும் இந்த யோசனையைத்தான் கூறியது. பிரிட்டனும் அமெரிக்காவும் இதை எதிர்ப்பதாகத் தெரிகிறது. லெவாண்டில் பிரெஞ்சு ஆக்கிரமிப்பைத் தடுக்கவும், ஸிரியா, லெபனன் சுதந்திரத்தைப் பாதுகாக்கவும் அரபு சங்கம் தீர்மானித்திருக்கிறது. லெவாண்டிலிருந்து படைகளை வாபஸ்பெறுமாறு பிரெஞ்சு சர்க்காரை அரபி சங்கம் கேட்டிருக்கிறது. இதனிடையே பிரிட்டன் மீது பிரெஞ்சு புகார்கள் கிளம்புகின்றன. ஸிரியாவில் பிரிட்டன் அதிக்கிரமமாக நடந்துகொள்ளுவதாக பிரெஞ்சு சர்க்கார் வட்டாரங்கள் கருதுகின்றனவாம். பிரான்ஸை இழிவாக நடத்துவது ஆபத்தில் போய் முடியும் என்று டிகால் மிரட்டுகிறார்.

## சீனாவில் ஜாப் எதிர்த் தாக்குதல்

சீனாவின் விஸ்தாரமான போர் முனைகளில் தென் மாகாணமான குவாங்ஸியில் கடும் போர் நடக்கிறது. முன்பு அமெரிக்க விமான தளமாக இருந்த லியுச்சோவைப் பாதுகாக்க ஜப்பானியர்கள் எதிர்த்தாக்குதல்களை நடத்துகின்றனர். லியுச்சோவுக்கு 63-மைல் மேற்கில் இஷானில் முக்கால் பாகத்தை ஜப்பானியர்கள் திரும்பப் பிடித்துவிட்டனர். மேற்குக் கோடியில் சீனர்கள் நிற்கின்றனர். ஜப்பானியப் படைகள் இன்னும் தெற்கிலும் சில வெற்றிகளைப் பெற்றிருக்கின்றனர். காண்டனுக்கு 100 மைல் வட கிழக்கிலுள்ள லிம்பிங் நகரை ஜாப்கள் பிடித்துவிட்டனர். மற்றொரு ஜாப்படை டாங்குக்குள் பிரவேசித்துவிட்டது. இந்து சீன எல்லை அருகில் கோபாங்கிலிருந்து ஜப்பானியர் மற்றொரு எதிர்த் தாக்குதல்களை நடத்தினர். இதனால் எல்லைக்கருகிலுள்ள சுங் சின்புவிலிருந்து சீனர்கள் வாபஸாக வேண்டி வந்தது.

போர்னியோ தீவின் வட பாகத்தில் ஆஸ்திரேலியப் படைகள் இறங்கியிருக்கின்றன. லாபான் விமான நிலையம் பிடிபட்டதாகவும் செய்தி கூறுகிறது. இந்த படையெடுப்பு வெற்றிபெறுமாயின் ஜப்பானியருக்கு டச்சு இந்தியத் தீவுகளின் எண்ணெய் வசதிகள் கிடைப்பது சிரமமாகிவிடும். ஜப்பான் மீது அல்லது சீனக்கரை மீது பெரும் படையெடுப்பை நடத்த ஜெனரல் ஸ்டில்வெல் ஆயத்தமாக இருப்பதாக சில தகவல்கள் கூறுகின்றன.

---




4½ மணியில் வீடு கட்டிய அதிசயம்; லண்டனுக்கு அருகில் மயன் சிருஷ்டி.

—"குளோப்" பத்திரிகை தகவல்.

இந்த மகானுபாவரைச் சென்னைக்கு தனியாக ஒரு விமானத்தில் அழைத்து வந்து தரிசான பகுதிகளை வீடுகளாக மாற்றும்படி செய்யலாகாதா சென்னை சர்க்கார்? என்று ஏங்குகிறார் வீடு வேட்டை வீரர்!

●

சமையல் அறையில் புலி விருந்து.

—பர்மா போர்முனைச் செய்தி

போர்முனையில் புலி எப்படியிருந்தாலும் சமையல் அறையிலாவது சங்கோஜமில்லாமல் நடந்து கொண்டிருக்குமல்லவா?

●

தன் நிழலைக் கண்டு டோரிகள் நடுக்கம்.

—லண்டன் செய்தி.

நிழலைக் கண்டு பயப்படுபவர்கள் பதவி வகிக்க லாயக்குள்ளவர்களா என்பதைப் பிரிட்டிஷ் வாக்காளர் நிதானிக்க வேண்டிய விஷயம்தான்!

●

"பாக்" (கட்டி அனுப்புவது) செய்வதில் காகிதம் உபயோகித்தல்; மேலும் சர்க்கார் சது...

—மத்திய சர்க்கார் உத்தரவு.

அப்படியானால் இனி 'மைசூர் பாக்' தயாரிப்பில் சர்க்கரைக்குப் பதிலாக காகிதத்தை உபயோகிப்பது சாத்தியமா? என்ற ஆராய்ச்சியில் இறங்கிவிட்டார் ஓர் ஹோட்டல்காரர்.

●

காலா பிடிபட்டது.

—பர்மா போர்முனை.

காலைப் பிடித்து பயன் என்ன? கழுத்தைப் பிடித்தால்தானே நல்லது என்கிறார் தமிழ் நாட்டில் ஓர் கயவாளி.

"புலி புல்லைத் தின்னுமா? பார்க்காமல் எதுவும் சொல்ல முடியாது."

—மகாராஷ்டிர காங்கிரஸ் தலைவர் காட்கில்.

இது புலிக்குள்ள பசியைப் பொறுத்த விஷயம்; வேறு வழியில்லாவிட்டால் என்னதான் செய்ய முடியும்?

●

ரப்பர் விலையை உயர்த்த வேண்டுகோள்.

—திருவனந்தபுரம் செய்தி.

இது இழுத்த இழுப்புக்கு வரக்கூடிய பொருள்; உயர்த்தலாம்; குறுக்கலாம் எப்படி வேண்டுமானாலும் செய்யலாமல்லவா?

இந்தியரின் தேகபலத்தைப் பெருக்க.

—வோராவின் உத்தேசம்.

ஹோட்டலில் சப்பாத்தி உணவை நிறுத்துவதுதான் இதற்குச் சிறந்த பரிகாரமென்கிறார் ஓர் ஹோட்டல்வாஸி.

---

## அட்டைப் படம்.

★

ஹைதராபாத்திலுள்ள ஊஸ்டானியா ஆஸ்பத்திரியின் அழகிய தோற்றம்.

## சிரிப்பு வெடி

### அட பாவமே!

தேடிக்கொண்டுவந்தவர்:-"ஏண்டா அம்பி! இந்த ஆத்திலே ஒரு எருமை மாடு விற்கப்போவதாய்ச் சொன்னார்களே, இருக்கா?

அம்பி:—(வீட்டிற்குள் திரும்பி) "அப்பா! உன்னை யாரோ தேடிண்டு வந்திருக்கா பார்!"

—டி. ஜே. ராமலிங்கம், தேவகோட்டை.

* * * *

### இரைந்து சொல்லாதேயும்!

ஜோஸ்யர்:—ஓய்! உம்மை ஒரு பிசாசு பிடித்துக்கொண்டு ஆறு வருஷமாக ஆட்டுகிறது.

வீட்டுக்காரர்:—இரைந்து சொல்லாதேயுங்காணும். அவள் அடுத்த அறையில் இருக்கிறாள்.

—திருவேங்கடஸாமி, சேரங்குளம்.

* * * *

### சரியான பேச்சு!

"எங்கள் ஆபீஸில் உத்தியோகத்திற்கு மனுப்போட்டிருந்தீரே, என்ன ஆச்சு தெரியுமா உமக்கு?"

"சொல்லாமலே தெரியுமே! எவனாவது ஒரு உபயோகமற்ற மக்கு மடசாம்பிராணிக் கழுதைக்கு அந்த உத்தியோகத்தை கொடுத்திருப்பான்"!

"ரொம்ப சரியான பேச்சு! உமக்குத்தான் அந்த வேலையைக் கொடுத்து, இன்னி தபாலிலே 'ஆர்டர்' அனுப்பிச்சிருக்கு."

—தி. நா. அரங்கராசன், வேலூர்.

* * *

### சரித்திர ஆராய்ச்சி

உபாத்தியாயர்:-அசோகப்பாடத்தைப்பற்றிச் சொன்ன பிறகு ராமு! அசோகர் காலத்து கல் வெட்டுகளிலிருந்து நீ என்ன தெரிந்து கொள்ளுகிறாய்?

ராமு:-அவர் காலத்திலும் காகிதப்பஞ்சம் இருந்திருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளுகிறேன்.

—ஹரி, ஆற்காடு




# மருதியின் காதல்

ஸ்ரீ. வ. வேணுகோபாலன்

பூர்வ கதை



36





சுடு சொல்

கணைக்கால் இரும்பொறை சேரதேசத்தின் அரசன். செங்கணான் என்பவன் சோழ நாட்டு மன்னன். இருவருக்கும் தீராத யுத்தம். அத்தி என்ற சேனாபதி சேரநாட்டு வீரன். நாட்டியக்கலையில் நிபுணன். அக்கலையில் தேர்ந்த மருதி என்பவளுக்கும் அத்திக்கும் காதல். இதன் காரணமாக அச்சமயத்தில் மூண்ட போர் ஒன்றில் சேர மன்னன் சோழமன்னனால் சிறைப்படுகிறான். மருதி தொண்டிநகர் போகிறாள். சோழ மன்னனின் மகன் நல்லடிக்கோன் அவளைச் சிறை செய்கிறான். தன் மகனுக்கு உறையூரில் உள்ளி விழா நடத்த ஓலையனுப்புகிறான் சோழன். சோழனது பட்டத்து யானை மதம்பிடித்து ஓடுகிறது. ஆமிராவதி நதிக்கரையிலிருந்த அத்தி அந்த யானையை வேல்வீசி குருடாக்குகிறான். அவன் தப்பியோடி இரும்பிடர்த்தலையார் என்ற புலவர் விடுதிசேர்கிறான். அங்கு ஆதி என்ற நங்கையிடம் பரிச்சயம் ஏற்படுகிறது இதற்கிடையே குடிதண்ணீருக்குத் தவித்து சேரன் இறந்து போகிறான் பழிக்குப் பயந்து சோழனும் மரிக்கிறான். நல்லடிக்கோன் மருதியை அடையச் செய்யும் முயற்சி பாழாகிறது. அவள் அத்திக்கு அனுப்பிய ஓலையை நல்லடிக்கோன் கைப்பற்றி வேறு ஓலை அனுப்புகிறான். இரும்பிடர்த்தலையார் அத்தி, ஆதி மூவரும் காவிரிப்பூம்பட்டினத்தில் கரிகாலன் அரண்மனை சேர்கின்றனர். ஆதியின் தந்தை கரிகாலன். அங்கு நல்லடிக்கோன் அனுப்பிய ஓலையோடு தூதுவர் பிரவேசிக்கின்றனர். ஆதிக்கு நாட்டியம் பயில்வித்த அத்தியின் நடத்தையை ஓலை மூலம் அறிந்தகரிகாலன் அவனை பிரஷ்டம் செய்து வெளியேற்றுகிறான். ஆதியிடம் எவ்வளவு தூரம் சொல்லியும் அவள் அத்தி நினைப்பை விடவில்லை. கரிகாலன் சினம் உச்சத்தை அடைகிறது. ஆதியின் ஏற்பாட்டின்படி அத்தி மீண்டும் நகர் வருகிறான். சிறைப்படுத்தப்பட்ட அத்தியையும், ஆதியையும் ஒன்று சேர்க்க இருப்பிடத்தலையார் செய்யும் விசித்திர சூழ்ச்சி வேலை கள்திடுக்கிடும் நிலையை அடைகிறது. அவர் ஆதியையும் அத்தியையும் வெளியேற்றப் போட்ட திட்டம் பிரமிக்கத்தக்க வகையில் நிறைவேறுகிறது. ஆதி போய்விட்டாள். இத்தகவலறிந்த கரிகாலன் புலவரின் யோசனைக்கு அனுசரணையாகப் படை திரட்ட ஆக்ஞையிடுகிறான். புலவர் படைகளோடு சிராமலை நோக்கிப் போகிறார். சிராமலையில் புலவர் ஏற்பாட்டின்படி முற்றுகைக்கான ஆயத்தம் நடக்கிறது. உக்கிரமானபோர் மூண்டுவிடுகிறது. புலவர்படை தீவிரமாக முன்னேறி அரண்மனைக்குள் புக ஆயத்தமாகிறது. நல்லடிக்கோன் நிலை என்ன ?

புலவர் படையின் பெருந்தாக்குதலால் தள்ளப்பட்டு, வேங்கை மார்பனின் படை புறங்காட்டி ஓடியது. நகரின் நாலு புறமும் படைகள் பரவிச் சூழ்ந்தன; அரசனின் அரண்மனையைச் சூழ்ந்து காப்பதற்காக வேங்கை மார்பன் முற்பட்டான். பகைவர் படை புறங்காட்டி ஓடுகை"ல், புலவரும், அத்தியும், அரசிளங்குமரனான பெருவிறற் கிள்ளியும் முன்னே கடுகினார்கள். படைகளின் பின் வரிசையிலே மணக்கிள்ளி கடுகி வந்து கொண்டிருந்தான்.

பின் தொடர்ந்து வரும் படைகளின் நிலையை வேங்கை மார்பன் நன்கு உணர்ந்து கொண்டான்; உதவிக்குச் சொல்லியனுப்பியும் சேரர் படை வரவில்லையே என்று உள்ளம் உடைந்தான். மிக வேகமாக அரண்மனை நோக்கித் தன் படைகளைச் செலுத்தினான். படைகளுக்கு முன்னதாக இரு தூதுவர்களை, அரண்மனையில் இருக்கும் நல்லடிக்கோனுக்குச் செய்தி கூறும்படி ஓடச் செய்தான். வேங்கைமார்பனின் கட்டளையை மேற்கொண்டு நல்லடிக்கோனின் மாளிகையை நோக்கி இரு வீரரும் இரு குதிரைகளில் ஊர்ந்து கடுகிச் சென்றார்கள்.

அரண்மனையின் அகமதிலைச் சார்ந்து, நல்லடிக்கோனின் காவல்படை அணிவகுத்து நின்றது. அகமதிளின் வாயிலில் நின்ற படைகளுக்கு முன்னர், இரு குதிரை வீரர்களும் நின்றார்கள். செய்தியை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டு நின்ற வீரர், "பகைப்படை என்னாயிற்று?..." என்ற கேள்வி, பல திக்கிலிருந்தும் கேட்டது.

"ஐயோ! வழி விடுங்கள்! பகைப்படை அரண்மனையை நோக்கி வருகிறது! அரசரிடம்

செய்தி..." என்று சொல்லிக் கொண்டே குதிரையிலிருந்து இறங்கிய இருவரும், மதில் வாயிலுக்குள் தாவிப் புகுந்து சென்றார்கள். அங்கே நின்ற காவல் வீரர் அனைவரும் படைகளுடன் போருக்கு ஆயத்தமானார்கள்—போர் நடக்கப் போவதை எதிர் பார்த்தார்கள்; ஆனால் அவர்கள் உள்ளத்திலே, பகைவரை எதிர்த்து அழிப்பதற்கான உறுதி தீவிரமாக உண்டாயிற்று. மதிலுக்கு முன் நிறுத்திய இரும்புத் தூண்கள் என்று சொல்லும்படி வீரர்கள் உறுதியுடன் நின்றார்கள்.

உள்புகுந்து சென்ற இருவீரரும் அரண்மனையை நோக்கி விரைந்தார்கள்: அரண்மனையின் நாலுபுறமும் வீரர்கள் மறுகி மறுகி நின்றார்கள் ஆயுதங்கள் தாங்கி; நிலவின் ஒளிக் கிரணங்களால், விளக்குகள் பொலிவின்றி காணப்பட்டன. சாளரங்கள் வழியே வரும் காற்று மிகுதியாலும், வீரர்கள் அங்கும் இங்கும் மறுகி நடப்பதாலும், நடுங்கித் துடித்துக் கொண்டிருந்தன விளக்குகளின் பிழம்புகள். அத்தோற்றம் அரண்மனைக்கு நேரப் போகும் பெருங்கேட்டை அறிவுறுத்துவனபோன்று இருந்தது. ஆனால் அரண்மனையில் காவல் புரிந்து திரியும் ஒவ்வொரு வீரனும், தன் அரசனுக்காகத் தன் உயிரைத் தியாகம்செய்வதற்குத் துணிந்து நின்றான் என்றே சொல்லலாம். எந்த ஒரு வீரனும் தன் உயிருக்கு ஆசைப்பட்டு ஓடிப்பதுங்கிவிட எண்ணவில்லை. பகைவரின் இருதயங்களை வாளும் வேலும் கொண்டு ஊடுருவச் செய்து வீரர் களியாட்டம் ஆட விரும்பி நின்றார்கள். போரில் தோல்வியா, வெற்றியா என்ற கேள்விக்கே அவர்கள் உள்ளம் இடம்கொடுக்கவில்லை. 'பொருது அழிப்பது' அல்லது பொருது மடிவதென்ற ஒரே எண்ணமே அவர்கள் உள்ளத்தில் வேரூன்றியிருந்தது.

அரண்மனையில் நல்லடிக்கோன் இருக்கும் சித்திர மண்டபத்தை நோக்கி இரு தூதுவ வீரரும் சென்றார்கள். 'அம்பெனக் கடிது சென்றார்' என்பது முற்றும் அவ்வீரர் விஷயத்தில் பொருத்தமாக இருந்தது. சித்திர மண்டபத்தின் வாயிலில் காவல்கொண்டு நின்ற இருவீரர்களும், உள்ளே புகமுயன்ற தூதுவரை வழிமறித்தார்கள்.

"ஏன், அரசரைப் பார்த்துச் செய்தி சொல்லவேண்டும்; வேங்கை மார்பரின் கட்டளை! தடை செய்தால் கேடு..." என்று தம் வாள்களை மார்புக்கு நேராகப் பிடித்து நின்றார்கள்.

"அரசரைப் பார்ப்பதைத் தடை சொல்லவில்லை; வேங்கை மார்பரின் கட்டளை வாழ்க! ஆனால் அரசர் குமார பவனம் போயிருக்கிறார்...அதைத் தான் சொன்னேன்...என்றான் ஒரு வீரன்.

"குமாரபவனத்திற்கா?—ஏன்?...நாங்கள் அங்கே போகிறோம்..." என்று கூறிவிட்டு, குமாரபவன மாளிகையை நோக்கிச் சென்றார்கள். குமாரபவனம், சித்திர மண்டபத்திற்குப் பின்புறத்தில் தான் இருந்தது. ஆனால் அந்த இடத்தை யாரும் அணுகுவதற்கு அஞ்சுவார்கள். ஆம்; நல்லடிக்கோனின் உயிர் அந்தக் குமார பவன மாளிகையில் பதுங்கிக் கிடக்கிறது-சிறைப்பட்டுக் கிடக்கிறது என்றே சொல்லலாம்; நல்லடிக்கோன் அணுகுவதற்கே அஞ்ச வேண்டியதான இடம் குமாரபவனம்; அத்தகைய இடத்தை மிக அற்பமாக எண்ணி விடுவார்களா, இந்தத் தூதுவர்கள்? ஆகவே இந்தத் தூதுவ வீரரின் மொழியைக் கேட்டு, சித்திர மண்டபத்துக் காவலர் துணுக்குற்றார்கள்; ஆனால் அக்காவலரின் மறுமொழியை எதிர்பாராமலே, தூதுவர் குமார பவன மாளிகையை அடைந்து விட்டார்கள்.

குமாரபவனத்தின் வாயிலில் பதின்மர் வீரர் காவலுடன் நின்றனர். அந்த மாளிகையை அணுகிப் பார்க்கும் யாரையும், அவ்வீரர் எளிதில் விட்டுவிடார்கள்: ஆகவே, வேங்கை மார்பனின் தூதுவர் அங்கே அணுகிய அளவிலே அவ்விருவரையும் மொய்த்துக்கொண்டு விட்டனர்.

"அரசருக்கு வேங்கை மார்பரிடமிருந்து செய்தி!...விரைவில் அரசருக்கு உணர்த்துங்கள்... பகைவர் அணுகிவிட்டார்கள்!" என்று ஆவலம் கொட்டினார்கள் இரு வீரரும்.

கேட்ட அளவிலே பதறி எழுந்தார்கள் பதின்மரும்.

"அதோ. அந்தச் சேடியரிடம் சொல்லிவிட்டு நில்; அவள் உள்ளே போய்ச் சொன்னபின், அரசரின் கட்டளை பெற்றால் உள்ளே போ!" என்றார்கள்.

"அப்படியே!" என்று கூறி மாளிகையின் முன் வாயிலில் இருந்த சேடியரிடம் அணுகி நின்று சொன்னார்கள்

"சேனாபதி வேங்கை மார்பரின் தூதுவர் நாங்கள்...விரைவில் அரசருக்குச் செய்தி உணர்த்த வேண்டும்!"

"ஆ!...என்ன செய்வது? அரசர் கடுங் கோபத்துடன் இருக்கிறார்!...போனால் என்ன சொல்வாரோ!...அப்படி என்ன செய்தி?..." என்று ஒருத்தி கேட்டாள்.

"ஐயோ!...தாமதம் நேர்ந்தால் எல்லோருக்கும் பெருங் கேடு தான்!...பகைப்படை அரண்மனையை அணுகிவிட்டது..."

'ஆ!...அப்படியா?...' என்று சொல்லிவிட்டுச் சேடி ஒருத்தி மாளிகைக்குள் ஓடினாள். மனம் பதறி போகும் வழியில் நிற்கும் பணிப்பெண்கள் யாவரும், "ஏன்? ஏன்?" என்று கேட்டும், எதிர்கூறாமல் மாளிகையின் உள்ளிடத்தை நோக்கி ஓடினாள்.

குமாரபவனத்தின் மாளிகைக்குள் அந்தப்புரத்தை நோக்கியே அவள் ஓடினாள்; அவள் ஓடி நின்றதுதான்—அவளுக்கு முன் நல்லடிக்கோன் கடுங்கோபத்துடன் மூற்பட்டான்.

"என்ன?" என்ற ஒரே கேள்வி அவன் வாயிலிருந்து அம்புபோல் புறப்பட்டது. ஒரு கணம் எதிர் மொழியத் துணிவின்றித் தடுமாறினாள் அந்தச் சேடி. துணிவு அடுத்த கணமே உண்டாயிற்று மனப்பதற்றத்தால்.

"வேந்தே! மன்னிக்கவேண்டும் வேங்கைமார்பரிடமிருந்து தூதுவர் செய்தி கொண்டுவந்துள்ளனர்...பகைவர் அணுகிவிட்டார்கள்..."

'அவர்களை உள்ளேவர விடுக!' என்றான். அவன் மனம் அலையிடைத் துரும்புபோல்சுழல்வதாயிற்று. தோல்வியும் வெற்றியும் மாறி மாறி அவன் மனக்கண் முன் தோன்றின. சேடி ஓடினாள். நல்லடிக்கோன் பெருமூச்சு விட்டபடியே, கண்களில் நீர் துளும்ப, தூதுவர் வரும் திக்கை நோக்கினான்.



அந்த அறையில் நிலவின் ஒளி நிறைந்திருந்தது. விளக்குகளின் ஒளியும் எங்கும் காணப்பட்டது. நல்லடிக்கோன் சிந்தனை செய்தவாறே பெருமூச்சுவிட்டு நிற்கையில் அந்த அறையிலிருந்து ஒரு குரல் எழுந்தது.

“உங்கள்மீதுள்ள இரக்கத்தால்தான் சொல்கிறேன். இப்போதாவது...” நல்லடிக்கோன் சரேலென்று திரும்பினான். அவன் திரும்பி நோக்கிய திக்கில் மருதி ஒரு கட்டிலில் அமர்ந்தபடியே அந்த வார்த்தைகளைச் சொன்ன பெருமிதத்தோடு, இளநகை செய்து கொண்டிருந்தாள். நல்லடிக்கோனைச் சிறிதும் அவள் மதித்துப் பேசுபவளாகத் தோன்றவில்லை; அவளுக்கு அருகில் அம்பை நின்று கொண்டிருந்தாள். நல்லடிக்கோன் நிலம் அதிரும்படியாக நடந்துமருதியை அணுகினான்.

“மருதி, என்ன சொல்கிறாய்? நீ இப்போது சொல்லியதைத் திரும்பச் சொல்!...” என்று உணர்ச்சி நிறைந்த குரலில் கூறினான். அம்பை நடுங்கி, அகலச் சென்று நின்றாள். ஆனால், மருதியின் முகத்தில் மாறுபாடு இல்லை. அவள் சிறிதும் அவனுக்கு அஞ்சவில்லை; அமர்ந்தபடியே, மீட்டும் ஒரு முறை நகை செய்தாள்.

“.........உங்கள் உயிருக்கு அபயம் அளிக்கிறேன் நான்! என் காதலரிடம் என்னைப் போக விட்டு விடுங்கள்! போரை நிறுத்தி உங்களுக்கும் இந்நாட்டின் அரச பதவியை உறுதிப்படுத்தச் செய்கிறேன்!.........”

“என்னவென்று சொல்வேன்? என் விருப்பம் போல் நடந்து கொள்ளுங்கள்; அந்தச் சேடி சொன்னதில் பகைவர் அணுகிவிட்டார்கள்...என்றாளே!... இனியேனும்...என்னை அனுப்பலாமே என்றுதான் சொன்னேன்; வீணாக உங்களை அவமானத்துக்கு ஆளாக்க—பெரும் பழிக்கு ஆளாக்க விரும்பவில்லை நான்.” என்றாள் மருதி முன்னிலும் மிகுதியாக நயமான வார்த்தைகளால்.

“மருதி, உனக்கு என்ன துணிவு? இந்த வார்த்தைகளைப் பேசத் துணிவு உனக்கு எப்படி உண்டாயிற்று? அத்தி வந்துவிட்டான் என்றா தானா?...நான் இன்னும் உனக்குச் சொல்ல வேண்டுமா?...இத்தருணம்போர்-கடும்போர் நடந்துகொண்டிருக்கிறது. இவ்வரணமனையைச் சூழ்ந்து பெரும்படைகள் இருக்கின்றன; உள்ளே புகுவது அற்பமல்ல! ஆனால், இந்நிலையில் உன்னிடம் நான் சொல்ல வந்தது என்னவென்று தெரியாமல் பேசுகிறாய்!..”

நல்லடிக்கோனின் வார்த்தைகள் தடுமாறின:

‘தாங்கள், சொல்வதெல்லாம் இனி...நடவாது!” மருதியின் குரல் முன்னிலும் கம்பீரமாக இருந்தது.

“ஒரு வார்த்தை!...என்ன நேர்ந்தாலும் உன்னை விடுதலை செய்வது முடியாத காரியம்! இது உறுதி: உன்னை இந்த மாளிகையை விட்டுச் சிறிதும் அகல்வதற்குக்கூட ஒப்ப மாட்டேன். போரில் வெற்றியோ, தோல்வியோ, என் உயிரைத் தியாகம் செய்யவும் ஆயத்தமாக இருக்கிறேன், உன்னை அத்தியிடம் ஒப்படைத்து நான் உயிர் தப்புவது என்பது முடியாது! இது உறுதி! இந்நகரை விட்டு நான் போக நேர்ந்தாலும் உன்னை விடேன்! இது உறுதி! மருதி, உன் எண்ணத்தை மாற்றிக்கொள்!...”

“முடியாது! இதுவரை உயிருடன் வாழ்ந்த நான்-மானமுடன் வாழ்ந்த நான்-இன்று விடியுமுன்போ, அல்லது நாளையோ என் காதலரைக் கண்டு களிப்பேன். இனி எனக்குப் பயம் ஏன்? என்னுடைய மானத்துக்குக் கேடுவரும் எந்தக் கணத்திலும் என் உயிரை மாய்த்துக்கொள்வேன்! முடிவில் உங்கள் மீதுள்ள இரக்கத்தால் சொன்னேன்...என்னை இப்போதே அனுப்பிவிடுங்கள்.. ...போர் நின்று விடும். .உங்கள் உயிருக்கு அழிவில்லை...”

“கணிகை மகளான உனக்கு மானம்!.....பார்ப்போம் உன்னுடைய உறுதியையும் என் உறுதி

யையும்...மருதி...உன் இளமை கெடுகிறது; உன் அழகு இன்னும் சில நாட்களில்...'' என்று கூறுகையில் தூதுவர் இருவரும் வாயிலில் வந்து நிற்பதைக் கண்டுகொண்டான்...அவன் கால்கள் தூதுவர் பக்கம் சென்றன.

''வேந்தே!...வேங்கை மார்பரின் செய்தி!...பகைவர் படை கணக்கில்லாமல் வந்து விட்டன நகருக்குள். நம் படை புறங்காட்டித் திரும்பி விட்டன. நகரின் வீதிகளிலே படைகள் பரவி விட்டன. எங்கும் கலகம் மூண்டு விட்டது. வேங்கை மார்பர், அரண்மனையைக் காக்கும் பொருட்டுக் கடுகி வருகின்றார் படைகளுடன். இனி பகைவரை எதிர்த்துத் தாக்குவது முடியாத காரியம்; அரண்மனைக்குள் புகுவது......'' என்று தூதுவர் இருவரும் மாறி மாறிச் சொல்லிக் கொண்டிருக்கையில் நல்லடிக்கோன் உடல் பதறியவனாய்க் கையால் குறிப்பிட்டு, ''போதும்!... நீங்கள் போய் என் கட்டளையைச் சொல்லுங்கள்: 'முடிவுவரையில் போர் செய்க! பகைவர் தலைவனைச் சிறைபிடிப்பதில் முற்படுக! நான் விரைவில் வருகிறேன்!' விரைவில் போய்ச் சொல்லுங்கள்'' என்றான்.

''தங்கள் கட்டளை!'' என்று கூறிக்கடுகிச் சென்றார்கள் தூதுவ வீரர். நல்லடிக்கோன் தீவிர உணர்ச்சியோடு, ''மருதி, நீ இங்கேயே மடிய வேண்டியதுதான்; மீள வழி இல்லை. உன்னோடு நானும் மடிகிறேன்.'' என்று சொல்லிக் கொண்டே மருதியின் பக்கம் சென்றான்.

''நீங்கள்மடிய வேண்டுமானால் போருக்குப் போங்கள்! போர்க்களத்தில் என் காதலர் கைவாளால் வெட்டுண்டு வீழ்ந்தால் வீர சுவர்க்கம் கிட்டும் ஐயா! அற்பமான எனக்காக இங்கு உங்களுடைய உயிர் பிரிந்தால் பிறவிதோறும் மீளா நரகத் துன்பங்களையே பெற நேரும்; உண்மை வீரனின் வார்த்தைகளைப் பேசுங்கள்! தாங்கள் வீரமுடையவராகத் தெரியவில்லையே! போருக்குப் பயந்து என்னைப் புகல் அடைகிறீர்களா? ...உங்கள் உயிருக்கு அபயம் அளிக்கிறேன் நான்! என் காதலரிடம் என்னைப் போக விட்டு விடுங்கள்! போரை நிறுத்தி உங்களுக்கும் இந்நாட்டின் அரச பதவியை உறுதிப்படுத்தச் செய்கிறேன்! என் பொருட்டுத்தான் இந்தக் கடும் போர் மூண்டிருக்கிறது என்பதைத் தாங்கள் உணர்ந்தும் மதி மயங்குவது வீண் அல்லவா? அல்லது துணிவிருந்தால் ஆயுதம் தாங்கி போர்க் களம் போங்கள். நகருக்குள் பகைவர் படை புகுந்த பின்பும், அற்பமான என் பொருட்டு இங்கே மறுகி நிற்பது உத்தம வீரனுக்கு அழகோ! இன்றே, நாளையோ இவ்வரண்மனை, தங்களுடன் பகைவரிடம் அகப்படப் போகிறது. அவ்விதம் உயிரை இழக்காமல், என்னை விடுவித்தால் நல்லது! உங்களுடைய குற்றங்களைப் பொறுத்துக் கொள்ளுமாறு நான் கேட்டுக் கொள்வேன். வீணே ஏன் இந்தக் கெட்ட எண்ணம்! தாமதம் ஏன் ஐயா! நீங்கள் போருக்குப் போய் உயிரைத் தியாகம் செய்து பழியைப் போக்கிக் கொள்ளலாம்; இல்லையேல் பகைவரிடம் உயிருடன் அகப்பட்டு மனிதப் பிணமாக நிற்காமல் என்னை விடுதலை செய்யுங்கள்! ஐயா! நீர் ஓர் அரசனே!...'' என்று சுடு சொற்களை அள்ளிப் பொழிந்தாள் மருதி. கற்பு நெறி தவறாத அவள் உள்ளம் திண்ணிதாக இருந்தது. அவள் பேச்சைக் கேட்டுத் திகைத்தான். கல் போன்ற அவன் இருதயம் அவமானத்தால் நெகிழ்ந்தது. பற்களை நெறுநெறெனக் கடித்துக் கொண்டான். மனம் மருகினான். செயலழிந்தான் சுடுசொல் கூறியவளை வெட்டி வீழ்த்துவான் போல் பார்த்தான். ஆனால் அவள் அழகு—அவனைச் செயலழிந்து நிற்கச் செய்தது. அவன் உள்ளத்தில் அவள் நிலையாகப் பதிந்துவிட்டாள்; அவளை ஒறுக்கவோ, வெறுக்கவோ அவனால் முடியவில்லை. அவன் மனமும் உறுதியுடன் அவள் அழகுவெள்ளத்தை வசீகரிக்கவே முற்பட்டது. அவளை ஒறுக்க வேண்டியவன், தீவிரமாகச் சிந்தித்தான். அந்த இடத்தை விட்டு அகலவும் அவன் மனம் துணியவில்லை; உணர்ச்சி வசமானான். மிக வேகமாக மருதியை நோக்கி ஓடினான்.

(தொடரும்)

# மாங்காய்மாலை

★

— ஸ்ரீமதி ராஜேஸ்வரி —

பத்மநாபன் வீட்டிற்குள் நுழையும் போதே, "சுந்தரி, சுந்தரி," என்று மிகக் குதூகலத்துடன் அழைத்துக் கொண்டே வந்தான். சுந்தரி சமையலறையிலிருந்து "என்ன விசேஷம்?" என்று கேட்டுக் கொண்டே அவன் முன் வந்து நின்றாள். பத்மநாபன், "இதோ பார், இதை", என்று அவளிடம் ஒரு கடிதத்தை நீட்டினான். சுந்தரி அதைப் பரபரப்புடன் வாங்கிப் பார்த்து விட்டு, அஸ்வாரஸ்யமாக அருகிலிருந்த மேஜை மீது வைத்தாள். பிறகு மௌனமாக பெருமூச்சு விட்டுக் கொண்டே, காபி எடுத்து வர உள்ளே சென்றாள்.

பத்மநாபனுக்கு அவளுடைய செய்கை ஆச்சரியத்தையும், ஏமாற்றத்தையும் அளித்தது. அந்தக் கடிதம், அவனுடைய ஆபீஸ் மானேஜருடைய பிள்ளையின் கலியாணக் கொண்டாட்டத்தில் ஸ்திரீகளுக்காகப் பிரத்யேகமாக ஏற்படுத்தியிருந்த பாட்டுக் கச்சேரி, விருந்து இவற்றிற்காக சுந்தரிக்கு வந்திருந்த அழைப்பு. அதைப் பார்த்து சுந்தரி மிகச் சந்தோஷமடைவாளென்று அவன் எதிர் பார்த்தான்.

சுந்தரி, டம்ப்ளரில் காப்பியுடன், அவன் முன் வந்து நின்றவுடன், பத்மநாபன், "நீ இந்த அழைப்பைப் பார்த்து ரொம்ப சந்தோஷப்படுவாயென்றல்லவா நினைத்தேன், நீ ஏன் வருத்தமாகயிருக்கிறாய்? உனக்குப் போக இஷ்டமில்லையா?" என்று கேட்டான். சுந்தரி, டம்ளரை மேஜைமீது வைத்து விட்டு, "போக இஷ்டமில்லாமலென்ன? ஆனால் அந்த விருந்திற்குப் பல பெரிய வீட்டு ஸ்திரீகள் வந்திருப்பார்கள். அவர்களெல்லோரும், வைரம், பச்சை பதித்த ஆபரணங்களும், ஜரிகைமயமான புடவைகளும் அணிந்து கொண்டு 'ஜக, ஜக' வென்று ஜொலிப்பார்கள். அவர்களுக்கு மத்தியில், நான் மாத்திரம் ஒரு நல்ல ஆபரணமுமின்றி, நல்ல புடவையின்றி, அபிஷேக நாச்சியார் போல் பேசாய் நின்றால், என் தரித்திரம் நன்றாகப் புலப்படும். நான்கு பணக்காரர்கள் மத்தியில, ஒரு ஏழை போய் நின்று, அவர்களுடன் சம உரிமை கொண்டாட முயற்சிப்பதும், அப்போது அவர்கள் அவளை அவமதிப்பதும், அதனால், அந்த ஏழைக்கு ஏற்படும் மனக்கிலேசத்திற்கு நரக வேதனையும் ஈடாகாது. எல்லாக் கேட்டால், நான் இந்த விருந்திற்குப் போகாமலிருப்பதே நலம்", என்று சொல்லிக் கொண்டே, முகம் சிவக்க, கண்களில் நீர் ததும்ப, உள்ளே சென்று விட்டாள்.

பத்மநாபன் யோசனையிலாழ்ந்தான். அவன் ஒரு ஆபீஸில் ஐம்பது ரூபாய் மாதச் சம்பளம் வாங்கும் குமாஸ்தா. யுத்த காலமாதலால், பஞ்சப்படியுள்பட தற்போது அறுபத்துமூன்று ரூபாய் வந்து கொண்டிருந்தது. அதிலும் மூன்று ரூபாய் போல் மரண பண்டிற்குப் பிடித்துக் கொண்டு, மிகுதியைத்தான் அவன் கையில் கொடுத்தார்கள். பி. ஏ. பட்டம் பெற்றும் அவனுக்கு அதிர்ஷ்டமில்லாதிருந்தது.

சுந்தரி, பெயருக்கேற்றாற்போல், கடைசல் பிடித்தத் தந்தப் பதுமை போல மிகவும் அழகாகவே இருந்தாள். அவளுடைய தந்தை ஒரு முனிஸிபல் உயர்தரப் பாடசாலையில் உபாத்தியாயராகயிருந்தார். சுந்தரி, சிறு குழந்தையாகத் தொட்டிலில் படுத்திருந்தபோது, ஒரு நாள், ஒரு கிழ ஜோஸியர், அவளைப் பார்த்து, அவளுடைய பெற்றோர்களிடம், "குழந்தை சுவர்ண விக்ரகம்போலிருக்கிறது. முகத்தில் ராஜ களை சொட்டுகிறது. நீங்கள் வேண்டுமானால் பாருங்கள். இவள் ஒரு நாள் வெள்ளிக் கொத்தில், தங்கச் சாவிகளைக் கோத்து இடுப்பில் செருகிக் கொண்டு ராணி போல் வளைய வருவாள்," என்று சொல்லிவிட்டு, உபாத்தியாயரிடம் தனக்கு ஆகவேண்டியிருந்த காரியத்தை சாதித்துக்கொண்டு போய் விட்டார்.

சுந்தரியின் பெற்றோர்களும் ஜோஸியருடைய வார்த்தை பலிக்குமென்ற பூர்ண நம்பிக்கையுடன் சுந்தரியை "இராணி" என்றே அழைத்து வந்தனர். கடைசியில் அவளை மீட்க, பத்மநாபன் தான் வந்தான். அவன் நல்ல குணமும் ரூபமும் உள்ளவன். சுந்தரி அவனுடன் மிக்க இன்பமாக வாழ்க்கை நடத்தியிருக்கலாம். ஆனால் அவள் கட்டிய மனக்கோட்டை தகர்த்தெறியப்பட்டதால் தனக்குக் கடவுள் ஏதோ பெரிய அநீதி இழைத்துவிட்டதாக எண்ணி, எப்போதும், அதிருப்தியுடனும், மனகசப்புடனும் இருந்துகொண்டு, தன் வாழ்க்கையை மாத்திரமின்றி பத்மநாபன் வாழ்க்கையையும், சுவையற்றதாயும் துன்பம் மிகுந்ததாயும் செய்து வந்தாள்.

கொஞ்சநேரங்கழித்து, பத்மநாபன் எழுந்து சுந்தரியைத் தேடிக்கொண்டு சமயலறைக்குச் சென்றான். அங்கு அவள் வாடிய முகத்துடன் ஏதோ வேலையில் மூழ்ந்திருப்பதைக் கண்டு, ஒரு பலகையை போட்டுக்கொண்டு உட்கார்ந்தான். பிறகு மெதுவாகத் தன் யோசனையை வெளியிட ஆரம்பித்தான், "ஆமாம், சுந்தரி, நீ ஏன் குறைப்பட வேண்டும்? கலியாணத்தின் போது வாங்கிய பச்சை வேல் தாரிப் புடவையை உடுத்திக் கொண்டு போகலாமே. நிறைய ஜரிகையிருக்கிறது தவிர, அதை உடுத்திக்கொண்டால் நீ சாக்ஷாத் மகாலட்சுமியைப் போலிருக்கிறாய்!" என்றான் உற்சாகமாக. அதற்கு சுந்தரி, "ஐய, இப்ப அது பாஷனில்லை. மேலும் அது பதினெட்டு முழம்; மாலை வேளைகளில் கட்டிக்கொள்ள ஏற்றதல்ல;" என்று சொல்லிவிட்டாள். பத்மநாபன், எப்படி

யாவது அவளைச் சந்தோஷப்படுத்த நினைத்து, "அப்படியானால், இப்போது என்ன முழுகிவிட்டது? சுமாராக, இப்போதுள்ள பாஷன்படி ஒரு புடவை வாங்கிவிட்டால் போகிறது. உத்தேசமாக என்ன விலையாகும் சொல், முடிந்தால் வாங்கிவிடலாம்" என்றான். சுந்தரி "இப்படிஷயூப்புடவை தான் பாஷனும். ஆனால், நம்மால் அதை வாங்குவதாகக் கனவுகூட காணமுடியாது. ஒன்று வேண்டுமானால் செய்யலாம். கை நெசவு டிஷ்யூ என்று புது மாதிரித்துணி வந்திருக்கிறது. கஜம் நான்கு ரூபாயாம். அதில் ஆறு கஜம் வாங்கி அதற்கேற்றுப்போல் முப்பது முப்பத்தைந்து ரூபாயில் பனாரீஸ் கரை வாங்கி தைத்துவிட்டால் நேர்த்தியாகயிருக்கும். ஆனால் அதுகூட அறுபது ரூபாயாகுமே" என்று சந்தேகத்துடன் கூறினாள். அதற்குப் பத்மநாபன் "பரவாயில்லை. நான் ஒரு கைகடியாரம் வாங்கலாமென்று அறுபது ரூபாய் வைத்திருக்கிறேன். இப்ப அதற்கு அவசரமில்லை. பிறகு வாங்கிக்கொள்ளுகிறேன். நீ வேலையை முடித்துக்கொண்டு சீக்கிரம் புறப்படு. புடவை வாங்கி வந்துவிடலாம்" என்று சொல்லி சமையலறையைவிட்டு வெளியே போனான்.

சுந்தரிக்கு சிறிது சந்தோஷம் ஏற்பட்டது. மறுநாள் காலை சுந்தரி எழுந்து பரபரப்புடன் வேலைகளை கவனித்துக்கொண்டே, நிமிஷத்துக்கொரு முறை தையற்காரன் வருகிறானாவென்று வாசற்பக்கம் எட்டிப்பார்த்த வண்ணமிருந்தாள். குறித்த பத்து மணிக்கல்லாமல், பதினொரு மணிக்குத் தையற்காரன் புடவையுடன் காட்சியளித்தான். அவனைத் தெருக்கோடியில் கண்டதுமே சுந்தரி தாயைப் பார்த்த சேயைப்போல் மகிழ்ச்சியடைந்தாள். புடவையை வாங்கிப் பிரித்துப் பார்த்தாள். மிகத் திருப்திகரமாகவேயிருந்தது.

பத்மநாபன் வழக்கம்போல் பத்து மணிக்கே ஆபீஸிற்குப் போய்விட்டான். சுந்தரிக்கு அன்று பொழுது போவது மிகக் கஷ்டமாகயிருந்தது. மாலைப்பொழுது எப்ப வருமென்று காத்திருந்தாள். சரியாக நாலேகால் மணிக்கு பத்மநாபன் ஆபீஸிலிருந்து வந்தான். வரும்போதே, சுந்தரியைப் பார்த்து, "தையற்காரன் வந்தானா? சீக்கிரம் தயார்செய்து கொள். ஐந்தரை மணிக்குப் புறப்பட வேண்டும். ஆறு மணிக்குப் பாட்டுக் கச்சேரி ஆரம்பித்துவிடும். நான் இரவு ஹோட்டலில் சாப்பிட்டுக் கொள்ளுகிறேன். நீ வேலைகளை முடித்துக் கொள்," என்று சொன்னான். சுந்தரி, "புடவை மிக அழகாகத்தானிருக்கிறது ஆனால் அதற்குத் தகுந்த நகையில்லாததால், அதன் அழகு சோபிக்குமோ, என்னவோ," என்று குறைப்பட்டுக் கொண்டாள்.

"உன் சிநேகிதி மிஸஸ் சந்திரராவைப்பற்றி பிரமாதமாகச் சொல்லிக்கொள்ளுவாயே. அவளை நீ கேட்டால், ஒரு நாளைக்கு இரவலாகச் சில நகைகள் கொடுக்கமாட்டாளா, என்ன?" என்றான். உடனே சுந்தரி, 'அது நல்ல யோசனைதான். மிஸஸ் சந்திரா ராவ் நான் எதுகேட்டாலும் இல்லையென்று சொல்லமாட்டாள், ஓடிப்போய் வாங்கி வந்துவிடுகிறேன்," என்று சொல்லிக் கொண்டே அடுத்த தெருவிலிருந்த மிஸஸ் சந்திரா ராவ் வீட்டிற்கு விரைந்து சென்றாள்.

மிஸஸ் சந்திரா ராவ் ஒரு மிலிட்டெரி அக்கௌண்டெண்ட்-ஜெனரலின் மனைவி. ஐசுவரியம் ஏராளமாகயிருந்தது. ஆனால் அழகில்லை கறுப்பாக, இரட்டை நாடி தேகமுள்ளவள். ஆனால் ரொம்ப சரளமான சுபாவம். தன் உயிர்த்தோழியைக் கண்ட மிஸஸ் சந்திராராவ் ஓடி வந்து அவளை எதிர்கொண்டழைத்துப்போய் ஒரு ஸோபாவில் உட்காரச்செய்து, தானும் அருகில் உட்கார்ந்துகொண்டாள். சிறிதுநேரம் க்ஷேம சமாசாரங்களை விசாரித்துவிட்டு, சுந்தரி மெதுவாகத் தான் வந்த காரியத்தைத் தெரிவித்தாள். உடனே மிஸஸ் சந்திராராவ் "இது என்ன பிரமாதம். நான் ஒவ்வொருவித வர்ணப் புடவைக்கும் ஏற்ற மாதிரி நகை ஸெட்டுகள் வைத்திருக்கிறேன். உனக்கு வேண்டியதையெடுத்துக்கொள். எனக்கே உன்னை நன்றாக அலங்கரித்துப் பார்க்கவேண்டுமென்று வெகு நாளாக ஆசை. இன்று என் ஆசை நிறைவேறிவிடும்" என்று உள்ளன்புடன் கூறிவிட்டு உள்ளே சென்று நகைகளைக் கொண்டுவந்து, சுந்தரியின் முன் வைத்தாள். சுந்தரிக்கு அவற்றைக்கண்டவுடன், எக்களிப்பும், ஆவலும் ஒருங்கே உண்டாயிற்று. எதை எடுத்துக்கொள்ளுவது என்றே தெரியாமல் திகைத்தாள். கடைசியில் மிஸஸ் சந்திரா ராவ், "உன் புடவையின் நிறம் பச்சையல்லவா? இதோ, இந்த பச்சை தோடுகளையும் பச்சைக்கல் மாங்காய் மாலையையும் எடுத்துக்கொள். கைக்கு தங்கத்தில் கரும்பச்சையும், வெளிர்பச்சையும் சேர்ந்து இனாமல் வேலைப்பாடுசெய்த வளையல்கள் தருகிறேன். தலையில் பூக்களுடன் பச்சையிலைகளைக் கொஞ்சம் அதிகமாகவைத்துத் தொடுத்துச் சூட்டிக்கொள். மரகதலட்சுமி, 1946-ம் வருஷத்து பாஷன் இராணியாக அவதாரமெடுத்தது போலிருப்பாய்" என்று சொல்லி நகைகளை அவளுக்குப் பூட்டி மகிழ்ந்தாள். நேரமாகிவிட்டதால் சுந்தரி, நகைகளைத் திரும்ப அன்று இரவோ அல்லது மறுநாள் காலையிலோ கொண்டுவந்து கொடுப்பதாகக் கூறி, விடை பெற்றுக் கொண்டு வீடு வந்து சேர்ந்தாள்.

வீடு சேர்ந்ததும், சுந்தரி எஞ்சியிருந்த அலங்காரத்தையும் மிஸஸ் சந்திரா ராவ் சொல்லிக் கொடுத்தபடி செய்து முடித்துக்கொண்டு, விருந்திற்கும் போகத் தயாராகப் பத்மநாபனின் எதிரில் புன்முறுவலுடன் வந்து நின்றாள். அவள் பிரசன்ன வதனத்துடன், அழகாக வந்து நிற்பதைப் பார்த்த பத்மநாபனுக்கு உணர்ச்சி மேலிட்டு, சுவர்க்கம் இரண்டு விரக்கடையாகத் தோன்றியது. "அலங்காரம் ஜோராகயிருக்கிறதே, வா, போவோம்" என்று சொல்லி, அவளை அழைத்துப் போய் கலியாண வீட்டில் விட்டுவிட்டு, இரவு ஒன்பதரை மணிக்குத் திரும்ப வந்து அழைக்துப் போவதாகக் கூறிவிட்டுப் போனான்.

சுந்தரி சற்று கூச்சத்துடனேயே, உள்ளே சென்றாள். ஆனால் மானேஜரின் சம்சாரம், அவளைப் பரிவுடன் உபசரித்து உள்ளே பாட்டுக் கச்சேரி நடந்துகொண்டிருந்த இடத்தில் உட்காரவைத்தாள். சுந்தரி எதிர்பார்த்தபடியே பல பெரிய மனிதர் வீட்டு ஸ்திரீகள் ரொம்ப ஆடம்பரமாக அலங்கரித்துக்

கொண்டு வந்திருந்தனர். ஏதோ பெரிய இடத்துப்பெண் என்றுநினைத்துக்கொண்டு அவளை வட்டமிட்டுக்கொண்டிருந்தனர். பலர் இயற்கையிலேயே ரொம்ப சாமர்த்தியமுள்ளவளாதலால், சுந்தரி இடத்திற்கும், சமயத்திற்கும் ஏற்றவாறு, தன்னையும் மறந்து, இலேசாக சிரித்துக்கொண்டு, பொது விஷயங்களைப்பற்றி அவர்களோடு வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருந்தாள்.

பாட்டுக் கச்சேரி முடிந்து, விருந்தும் வெகு சிறப்பாக நடந்தது. தாம்பூலம் வாங்கிக்கொண்டு விருந்தினர்கள் தங்கள் தங்கள் காரில் ஏறிக்கொண்டு போய் விட்டனர். சுந்தரியும், பத்மநாபன் வந்தவுடன், மானேஜருடைய மனைவியிடம் விடை பெற்றுக்கொண்டு வெளியே வந்தாள். இரவு வெகு நேரமாகிவிட்டதால் ஒரு ஜட்காவை அமர்த்திக்கொண்டு, இருவரும் வீடுபோய்ச் சேர்ந்தனர்.

வீட்டிற்கு வந்ததும் சுந்தரிக்கு சுய ஞாபகம் வந்தது. இரவல் நகைகளைக் கழற்றவேண்டுமே யென்று வருத்தமுண்டாயிற்று. அவற்றைக்கழற்றுமுன், ஒரு முறை ஆசைதீரத் தன்னழகை கண்ணாடியில் பார்த்துக்கொள்ளலாமென்று கண்ணாடியின் எதிரில் போய் நின்றாள். நின்றதும் அவள் மனது பகீரென்றது. கழுத்தில் மாங்காய் மாலையைக் காணவில்லை. உடனே சென்று கணவனிடம் விஷயத்தைத் தெரிவித்தாள். அவனுக்குத் தலையில் இடி விழுந்தது போலிருந்தது. "ஒரு வேளை, கலியாண வீட்டிலேயே விழுந்துவிட்டதோ" என்றான். அவள், "இல்லை, நான் படியிறங்கிவண்டியிலேறும்வரையில் கழுத்தில் கனமாகயிருந்தது போல்தானிருக்கிறது. வண்டியில்தான் விழுந்திருக்கவேண்டும். வண்டிக்காரன், நம்பர், அடையாளம் ஏதாவது நினைவிருக்கிறதா?" என்று கேட்டாள். பத்மநாபன், "நான் ஒன்றையும் கவனிக்கவில்லை. எதற்கும் சென்று பார்த்து வருகிறேன். பத்திரமாகயிரு" என்று சொல்லிவிட்டு வெளியிருளில் சென்று மறைந்தான். பாதி ராத்திரிக்குப் பிறகு வெறுங் கையுடன் திரும்பி வந்தான். மிஸஸ் சந்திரராவுக்கு என்ன பதில் சொல்லுவது என்று சுந்தரி துடித்துக்கொண்டிருந்தாள். கடைசியில் பத்மநாபன் "மாலையின் கொக்கி உடைந்துவிட்டது அதைச் சரிப்படுத்தி இரண்டொரு நாளில் கொண்டு வந்து கொடுக்கிறேன்" என்று உன் தோழியிடம் சொல்லிவிட்டு மாலை வைத்திருந்த பெட்டியை வாங்கிவா. அதில் காணப்படும் கம்பெனியின் பெயரிலிருந்து மாலை செய்யப்பட்ட கம்பெனியைக் கண்டுபிடித்து, மாலையை வாங்கிவிட வேண்டியதுதான்." என்றான். அது நல்ல யோசனை யென்று சுந்தரிக்குப் பட்டது. சுந்தரி மறுநாள் விடியற்காலையில் மீதி நகைகளை எடுத்துக்கொண்டு மிஸஸ் சந்திரராவ் வீட்டிற்குப் போனாள். அவற்றை மிஸஸ் சந்திரராவிடம் கொடுத்து விட்டு மாங்காய் மாலையைப் பற்றி தன் கணவன் சொல்லிக் கொடுத்த புளுகைச் சொன்னாள். மிஸஸ் சந்திரராவ், "அதனால் பரவாயில்லை. கவலைப்படவேண்டாம். நானே அதை ரிப்பேர் செய்துகொள்ளுகிறேன்" என்றாள். ஆனால் சுந்தரி சமயோசிதமாக தான் செய்த தவறைத் தானே திருத்தினால்தான் தனக்கு மன அமைதியுண்டாகும் என்று சொல்லி, மாலை வைக்கும் பெட்டியையும் வாங்கிக்கொண்டு வீடு வந்து சேர்ந்தாள்.

பெட்டியை எடுத்துக் கொண்டு தம்பதிகளிருவரும் அதில் காணப்பட்ட பெயருள்ள கம்பெனிக்குச்சென்று விசாரித்ததில், அந்தப் பெட்டி தான் அங்கு செய்யப்பட்டதென்றும், அப்படிப்பட்ட மாலை ஏதாவது நகை கம்பெனியில் செய்யப்பட்டிருக்கலாமென்றும் தெரிந்துகொண்டார்கள். பல கடைகளில் மாலையின் உருவம், வேலைப்பாடு இவற்றை நினைவுபடுத்திக் கொண்டு சுற்றியலைந்த பின், ஒரு பிரபல நகைக் கம்பெனியில் அதே மாதிரி பச்சைக் கல் விழைத்த மாங்காய் மாலை ஒன்றிருந்தது. விசாரித்ததில் அதன் விலை இரண்டாயிரத்தைந்நூறு ரூபாய் என்று தெரிய வந்தது. விலையைக் கேட்டதும் இருவருக்கும் உயிரே போய் விடும்போலிருந்தது. ஆனால் வேறு வழி? தாங்கள் இரண்டொரு நாளில் பணத்தைக் கொடுத்து மாலையை வாங்கிப் போவதாயும், அது

வரையில் அதை விற்காமல் வைத்திருக்கும்படியும், அப்படித் தாங்கள் வாங்கிய பின் திருப்ப நேரிட்டால் இருநூறு ரூபாய் தள்ளியாவது திரும்ப வாங்கிக் கொள்ளும்படியும் கடைக்காரனிடம் மன்றாடி கேட்டுக் கொண்டு, அவன் ஒருவாறு இவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கிய பின் வீடு திரும்பினர்.

பத்மநாபன் பல இடங்களில் பலவிதமாக அவமானப்பட்டு மூன்று நாட்களில் வேண்டிய தொகையைத் திரட்டி, மாலையை வாங்கிவிட்டான். சுந்தரி அதைப் பெட்டியில் வைத்து, "திக், திக்" கென்று அடித்துக்கொள்ளும் மனத்துடன் மிஸஸ் சந்திரராவிடம் கொண்டு போய் கொடுத்தாள். மிஸஸ் சந்திரராவ், "எங்களுக்குப் பூனாவிற்கு மாற்றலாகிவிட்டது. நாளைக் காலை புறப்பட்டுப் போகிறோம். நீ இன்று வந்திராவிட்டால், நான் உங்கள் வீட்டிற்கு வருவதாக இருந்தேன்" என்று சொல்லிக் கொண்டே, பெட்டியை வாங்கித் திறந்து பார்க்காமலே உள்ளே கொண்டு போய் வைத்துவிட்டு வந்தாள். சுந்தரிக்கு உயிர் வந்தது.

அன்றிலிருந்து சுந்தரி வேறு மனுஷியாகிவிட்டாள். கடனை எப்படி அடைப்பது என்ற யோசனையே பெரிதாகிவிட்டது. தனி வீட்டை விட்டு, ஒண்டுக் குடித்தனம் போனாள். சினிமா, பூ, வளைபோன்ற செலவுகளை அடியோடு நிறுத்திவிட்டாள். தவிர, மத்தியான வேளைகளில் வீட்டிற்கருகிலிருந்த கூட்டுறவு தையல் சங்கத்தில் சேர்ந்து உடைகள் தைத்துக் கொடுத்துப் பணம் சம்பாதித்து வந்தாள். பத்மநாபனும் கிராமத்திலிருந்த தன் சிறு வீட்டையும் நிலத்தையும் 900 ரூபாய்க்கு விற்றான். ஆபீஸ் நேரம் போக மீதி நேரத்தில் இரண்டொரு பணக்காரப் பையன்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து வந்தான். சதிபதிகளுடைய ஒன்றுபட்ட முயற்சியால் கடன் இரண்டு வருஷத்தில் ஜாடாவாக அடைந்துவிட்டது. இருவருக்கும் மனதிலிருந்து பெரிய பாரம் நீங்கி, நிம்மதியாக தூங்கினார்கள். ஆனபோதிலும் 'கடன் பட்டார் நெஞ்சம்போல் கலங்கினான் இலங்கை வேந்தன்' என்றபடி இரண்டு வருஷ மனக்கிலேசத்தால் சுந்தரி துரும்பாக இளைத்து, அழகு மங்கிப்போய்விட்டாள். நகைப் பைத்தியமும் தெளிந்துபோய், உலக வாழ்க்கையின் அநித்தியத்தையும் உணர்ந்து கொண்டாள். தன் கடமையும், கணவனுடைய அன்பும் அருமையையும் புலனாயிற்று.

ஒருநாள் சுந்தரி கணவனுடன் கடற்கரைக்குச்சென்றாள். அங்கு தற்செயலாக மிஸஸ் சந்திரராவைப் பார்த்தாள். அவள் அடையாளம் தெரிந்துகொள்ளு முன்பே, சுந்தரி அவளிடம் போய் பேச ஆரம்பித்தாள். மிஸஸ் சந்திரராவ், "என்ன, சுந்தரி, உனக்கு என்ன உடம்பு? ஏன் இப்படி அடையாளம் தெரியாமல் இளைத்துவிட்டாய்?" என்று கேட்டாள். அதற்கு சுந்தரி சற்று ஆத்திரத்துடனேயே, "எல்லாம் உங்களால்தான்" என்று ஆரம்பித்து, மாங்காய் மாலையின் கதையை விவரமாகச் சொன்னாள். மிஸஸ் சந்திரராவ், மிகுந்த ஆச்சரியமும், சோகமும், நிறைந்த குரலில் "நீ இரண்டாயிரத்தைந்நூறு ரூபாய் செலவழித்தா என் மாலைக்குப் பதில்வாங்கிக் கொடுத்தாய்? என் மாலை போலிக் கற்களாலான பூச்சு நகையல்லவா? அதை நான் நூற்றிருபது ரூபாய்க்குத்தான் வாங்கினேன். அந்தக் கம்பனிக்கு எழுதினால் இப்போதுகூட ஒன்று வரவழைக்கலாம். நீ இப்போதே வந்து உன் மாலையை எடுத்துப் போகவேண்டும்". என்று வற்புறுத்தி, பத்மநாபனி




என்னுங்க, எனக்கு எழுதப்படிக்கத் தெரியாதுங்க. அரிசி கார்டுக்கு எப்படி எழுதிப் போடறதுங்க..........

ரேஷன் உத்யோகஸ்தர்:—அதான் இங்கே எழுதியிருக்கே, பார்த்துக்கேயேன், என்னை தொந்திரவு பண்ணாதேய்யா!

டம் அனுமதி பெற்று, அவளைத் தன் காரிலே வீட்டிற்கு அழைத்துப் போய் உபசரித்தாள். பிறகு அவள் பச்சைக்கல் மாங்காய் மாலையைக் கொண்டு வந்து சுந்தரியிடம் கொடுத்துவிட்டு, "என் மாலை தொலைந்துபோன சாக்கிலாவது, நீ இந்த நல்ல மாலையை அணிந்துகொள். உன் இரண்டாயிரத்தைந்நூறு ரூபாய் பெறுமானமுள்ள நகையை வைத்துக் கொண்டதற்கு உனக்கு வட்டி கொடுக்க வேண்டும்: அந்தப் பணத்தை உனக்குக் கொடுக்காமல், அதற்கு நான் எனக்குப் பச்சைக் கல் மாங்காய் மாலை வாங்கிக் கொண்டுவிடுகிறேன்," என்று சொல்லிக்கொண்டே அந்த அழகிய மாலையைச் சுந்தரியின் கையிலிருந்து வாங்கி, அவள் கழுத்தில் போட்டாள். ஆனால் இப்போதுதான் சுந்தரிக்கு நகைகள் மீது வெறுப்பு ஏற்பட்டு விட்டதே. மறுநாள் அவள் அதைக் கழற்றி, பாரத நாட்டுப் பெண்களின் அபிவிருத்திக்காக வசூலிக்கப்பட்டு வந்த நிதிக்கு அம்மாலையைத் தன் காணிக்கையாகக் கொடுத்து விட்டு மங்காப் புகழ் மாலையை அணிந்து கொண்டாள்.

---

# குறள் கூத்து

பதி

## காட்சி 1

இடம்:—அரிச்சந்திரன் தர்பார்.

காலம்:—மாலை நேரம்.

பாத்திரங்கள்:—அரிச்சந்திரன் முதல் மந்திரி சத்திய கீர்த்தி-இரண்டாவது மந்திரி-மெய்யறிவார்.

அரச சிப்பந்திகள், கட்டியக்காரன். (அரிச்சந்திரன் தர்பாருக்கு வருகிறான். கட்டியக்காரன் கட்டியம் கூறுகிறான்.)

கட்டியக்காரன்:—ராஜாதி ராஜ...ராஜ கம்பீர... ராஜ நீதி தவறாத...அரிச்சந்திர மகாராஜா...தர்பாருக்கு வருகிறார்! தர்பாருக்கு வருகிறார்!!

அரசன்:—(உட்கார்ந்து) எல்லோரும் அமருங்கள். (உட்காருகிறார்கள்) மந்திரி சத்தியகீர்த்தி! ஊரில்-என்ன—ஒரே குழப்பமாயிருக்கிறது?

மந்:—மலைநாட்டுத் திருடன் தொந்திரவு அதிகமாகயிருக்கிறது.

அரசன்:—இன்னும் அவன் அகப்படவில்லையா?

மந்-சத்:—இல்லை. அவன் இருப்பிடம் விசாரித்துக்கொண்டுதானிருக்கிறோம்.

அரசன்:—(யோசனையோடு) ஹூம்! சரி!...... இன்றிரவு நாமே......மாறுவேஷம் பூண்டு, நகர சோதனை செய்ய உத்தேசம்.

மந்-சத்:—அடியேனும் வரவேண்டுமோ?

அரசன்:—வேண்டாம்! நாம் மாத்திரம் சென்று வருகிறோம். நீர் அரண்மனையில் இரும்.

மந்-சத்:—சரி! உத்திரவுப்படி!

அரசன்:—மந்திரி மெய்யறிவாரே! இன்று மாலை தேவாலயத்திற்குப் போக வேண்டும். அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யும்.

மந்தி-மெய்:—புத்தி. உத்திரவுப்படி!

அரசன்:—சபையோர்களே! இன்று இத்துடன் முடிப்போம். மற்றவைகளை நாளை கவனிப்போம்.

(தர்பார் கலைகிறது)

## காட்சி 2.

இடம்:—ராஜ வீதி.

காலம்:—இரவு (நடு ராத்திரி நல்ல இருட்டு)

பாத்திரங்கள்:—மலைநாட்டுத் திருடன்-மாறுவேஷம் பூண்ட அரசன்.

(இருவரும் சந்திக்கிறார்கள்)

அரசன்:—(குரலை மாற்றிக் கொண்டு) யாரப்பா... அங்கே போறது?

மலை-திரு:—எம்ப்பா கேக்கிறே?

அரசன்:—நடு ராத்திரியிலே—தனியேப் போறியேன்னு கேட்டேன்.

மலை திரு:—ஒனக்குமாத்திரந் தொணையிருக்கோ? நீயுந் தனியாத் தானேப் போறே? நீயாரு? சொல்லேன்.

அரசன்:—நான்... இந்த ஊருகான்.

மலை-திரு:—நானும்—இந்த ஊருதான்.

அரசன்:—இந்த ஊரிலே-நீ யாரு?

மலை-திரு:—நீ யாருன்னு சொல்லேன்! நான் சொல்றேன்.

அரசன்:—நீ மொதல்லே சொல்லு, பிறகு நான் சொல்றேன்.

மலை-திரு:—சொல்றியா? நான் சொல்லட்டுமா?

அரசன்:—சும்மா சொல்லு.

மலை-திரு—நான் மொதலில்லா வியாபாரி

அரசன்:—(ஆச்சரியத்தோடு) நெசமா? நீ திருடன் தானா?

மலை-திரு:—ஆமா...நீயாரு? சொல்லலியே!

அரசன்:—நானொரு நாட்டுப்புரத்தன்.

(புரத்தல்=காத்தல்).

மலை-திரு:—நல்லதாப் போச்சி! நாம் போற இடத்துக்கு நீயும் வர்றியா?

அரசன்:—நீ எங்கே போறே?

மலை-திரு:—அரண்மனைக்கு திருடப் போறேன்? வர்றியா?

அரசன்:—(தலையை அசைத்து) ஹூம்! ஹூம்!! ஒன்னே நம்ப முடியாது! நான் உலைகூட வரவுங் கூடாது.

மலை-திரு:—ஏன்?

அரசன்:—நீ உண்மையான திருடனா இருந்தா, உன்னையே திருடன்னு சொல்லிக்கொள்ளுவியா? மேலும்-நீ திருடப்போற எடத்தையும்...சொல்லுவியா? என்னமோ! எனக்கு சந்தேகந்தான்.

மலை திரு:—அட, போப்பா! நான் "கள்ளனிலும் கள்ளன்-கை தேர்ந்த கள்ளன்". தெரியுமா?

அரசன்:—கை தேர்ந்த கள்ளனாயிருந்தா-உள்ளத்தைச் சொல்ல மாட்டியே!



திருமலை:—அது நெசந்தான். ஆனா...என் குரு எங்கிட்டே சத்தியம் வாங்கியிருக்காரு.

அரசன்:—அதென்ன-திருடனுக்குச் சத்தியம்?

மலை திரு:—திருடலாம்! குடிக்கலாம்! வெட்டலாம்! திட்டலாம்! ஆனா...பொய் மாத்திரம் சொல்லக்கூடாது.

அரசன்:—ஹாஹ் ஹா-ஹஹ் ஹா [சிரிக்கிறான்]

மலை திரு:—என்னப்பா சிரிக்கிறே?

அரசன்:—(சிரித்துக் கொண்டு) ஹூம்! ஹூம்!! இல்லே! திருடன் பொய் சொல்லாமே இருக்க முடியுமாங்கறேன்?

மலே திரு:—ஏம் முடியாதுங்கிறேன்?—

அரசன்:—நீ திருடுறே! ஆப்பிட்டுக்கிறே, மெய் சொன்னு உட்டுடுவாங்களா?

மலே திரு:—பொய் சொன்னு மாத்திரம்-உட்டுடுவாங்களா?

அரசன்:—(யோசனேயோடு) உடமாட்டாங்களா?

மலே திரு:—ஆப்பிட்டுக்கிட்டத் திருடன்-பொய் சொன்னலுஞ் சரி! மெய் சொன்னலுஞ் சரி! யாரும் நம்ப மாட்டாங்களே.

அரசன்:—(யோசனே செய்து) ஆமாம்!...நீ சொல்றதுஞ் சரிதான்! ஹூம்!... அதனுலே?

மலே திரு:—காரியமில்லாமே...காக்காசுக்குப் பொருத இந்தப் பொய்யை ஏன் சொல்லனுங்கிறேன்.

அரசன்:—(யோசனேயோடு) சரிதான்! பொய் சொன்னு...பிரயோசனம் இல்லேதான்! ஹூம்... சரி! வர்றியா அரண்மனேக்குப் போகலாம்? வழியெல்லாஞ் சொல்லித் தாறேன்.

மலே திரு:—ஓ! பொறப்படு. நீதான்... நம்ம அண்ணே!

(இருவரும் போகிருர்கள்.)

## காட்சி 3

இடம்:—அரண்மனேக்குப் பக்கம்.

பாத்திரங்கள்:—திருடன்—அரசன்.

(அரசன் அந்தரங்க அறையைக் காண்பித்து)

அரசன்:—(மெல்லிய குரலில்) தம்பி! இதுதான் அரசருடைய அந்தரங்க அறை. இதிலே நொழஞ்சா நல்ல வேட்டே.

மலே திரு:—நொழைய வழியைக் காணுமே?

அரசன்:—நான் காமிக்கிறேன். இந்த வழியாப் போனின்னு...அந்தரங்க அறையில் கொண்டு போய்விடும். அங்கே ஆப்பிடுரத்தை...அவசரமா... எடுத்துக்கிட்டு உடனே வந்திடு. நான்...இங்கிருந்து ஆள் பாத்துக்கிறேன். சரிதானு?

மலே திரு:—சரிதாண்ணே! நீ இங்கேயே இரு. இதோ அடிச்சிக்கட்டு வர்றேன்.

(திருடன் போய் திரும்பி வருகிருன்)

மலே திரு:—(சந்தோஷத்தோடு) அண்ணே! வந்த வேலை நல்ல வேலேண்ணே!

அரசன்:—(ஆச்சரியத்தோடு) என்னடாத் தம்பி?

மலே-திரு:— பாத்தியா! ரெத்தனக்கட்டி

அரசன்:—எத்தனேக் கட்டி?

மலே-திரு:— ரெண்டு.

அரசன்: — ரெண்டு தானு இருந்திச்சு?

திரு: - இல்லண்ணே ...இருந்தது மூணு.

அரசன்:—ஒரு கல்லே ஏன் உட்டுட்டு வந்தே?

திருட:— ஒனக்கொரு கல்லு! எனக்கொரு கல்லு! உடமைக்காரனுக்கு ஒரு கல்லும் இருக்கட்டும்ன்னு உட்டுட்டு வந்தேண்ணே.



அரசன்:—அட நீயும்—யென்னப்பா! கையிலே கெடச்சத்தே உட்டுட்டு வந்திட்டியே!

திருட:—இல்லண்ணே! மூணேயுங்கொண்டாந்தா! ரெண்டு பேருக்கு பங்கு போடுறதின்னு...கஷ்டமாயிருக்குமே?

அரசன்:—என்ன கஷ்டமிருக்கும்? ... காட்டிக் கொடுத்த, எனக்கு ஒண்ணு! கஷ்டப்பட்ட உனக்கு ரெண்டு! பங்கு சரியாப்போவுது.

திருடன்: -(தலையை அசைத்து) ஹூம்! ஹூம் அப்பிடியில்லண்ணே! திருட்டு சாமானுயிருந்தாலும் முறைப்படி—பங்கு போட்டுக்கணும்! மூணு கல்லுனு, ஆளுக்கு 1½ கல்லு பங்கு வரும். அதுக்கு ஒரு கல்லே-ஒடைக்கணும்! அதெல்லாம் வேண்டான்னுதான் ...ஒரு கல்லே—உட்டுட்டு வந்திட்டேன். இந்தாண்ணே-நீ ஒரு கல்லெடுத்துக்க! நானொரு கல்லெடுத்துக்கிறேன். போவலாமா?

(அரசன் ஒரு கல்லே வாங்கிக் கொண்டு)

அரசன்:—சரி! நேரமாச்சி! போக வேண்டியது தான்...ஹூம்!...ஏங் தம்பி! உன்னிருப்பிடம்?

திருடன்:—நம்ம கடுவங்காடு குகை இருக்கில்லே?

அரசன்:—ஆமா!

திருடன்:—பகலெல்லாம் அதுலேத்தான் இருப்பேன். சரி; நான் வர்றேண்ணே!

அரசன்:—சரி! நாளியாச்சி. போய்ட்டு வர்றியா தம்பி?

திருடன்:—சரிண்ணே! ஹூம்! உங்களே சந்திக்கிறதின்னு?

அரசன்:—இப்போ சந்திச்சம்ல்லே! அந்த மாதிரித்தான்! சந்திலே! பொந்திலே! சந்திக்கலாம்.

திருடன்:—சரி! சரி! நான் வர்றேண்ணே

அரசன்:—போய்ட்டு வா, தம்பி.

(இருவரும் பிரிந்து போகிருர்கள்)

## காட்சி 4

இடம்:—கடுவங்காடு குகை.

காலம்:—காலே.

பாத்திரம்:—திருடன்.

(குடியின் மயக்கத்தில் ஆடிப் பாடுகிருன்)

பாட்டு

ஆதரவற்றவர்களுக்கெல்லாம்—(என்ற மெட்டு)

முதலில்லா வியாபாரக்காரன்—என்
முன்னேர்களெல்லாரும்
குபேரன்
மதுவில் மயங்கும் மகா
தீரன்—பல
மன்னர்கள் நடுங்கிடும்
வீரன் (முதலில்லா)
பாதகஞ் செய்திடும்
நானே—தினம்
பகர்வதும் மெய்யதுதானே
மோதகம் உடைமிடும்
பகோனே—இந்த
மூடனேக் காத்திடுங்காளி
(முதலில்லா)

(போதையால் ஓர் ஆசனத்தில் சாய்கிருன்)

## காட்சி 5.

இடம்:—அரிச்சந்திரன் தர்பார்.

காலம்:—காலைநேரம்.

பாத்திரங்கள்:—அரசன், முதல் மந்திரி சத்திய கீர்த்தி இரண்டாவது மந்திரி மெய்யறிவார், காவலாளி.

(காவலாளி பர பரப்போடு தர்பாரில் புகுந்து)

காவலாளி:—அரசே! நம் அந்தரங்க அறையில் களவுபோயிருக்கிறது.

அரசன்:—(ஆச்சரியத்தோடு) ஆ! என்ன!...... அந்தரங்க அறையில் களவா? மெய்யறிவாரே! நீர் அந்தரங்க அறைக்குப் போய், எந்த முறையில்—என்னன்ன களவுபோயிருக்கிறதென்று பார்த்து வாரும்.

மந்-மெய்:—சரி! உத்திரவுப்படி! (வெளியேறுகிறான்)

அரசன்:—மந்திரி சத்தியகீர்த்தி! சீக்கிரமாக ஒரு சிறிய படையை அழைத்துக்கொண்டு நம் கடுவங்காட்டு குகைக்குச் செல்ல வேண்டும். அங்கு மலைநாட்டுத் திருடன் மறைவாக இருக்கிறான். அவனைப் பிடித்துக்கொண்டு குகையிலிருக்கும் சகல பொருள்களையும் கைப்பற்றிக்கொண்டு உடனே வர வேண்டும்! புறப்படும்.

மு-ம:—உத்திரவுப்படி!...போய் வருகிறேன்.

(முதல் மந்திரி சத்தியகீர்த்தி வெளியேறுகிறான்)

(இரண்டாவது மந்திரி மெய்யறிவார் வருகிறான்)

அரசன்:—மெய்யறிவாரே! களவின் விவரமென்ன?

மெய்யறி:—அவ்வாதேசத்து வியாபாரியிடத்தில் வாங்கப்பட்ட ரத்தினங்கள், மூன்றும் களவாடப்பட்டிருக்கின்றன. வேறொன்றும் போகவில்லை.

அரசன்:—(ஆச்சரியத்தோடு) என்ன! கற்கள் மூன்றும் களவாடப்பட்டனவா?

ம. மெய்:—ஆமரசே!

அரசன்:—மந்திரியாரே! எங்கும் நன்றாகப் பார்த்தீரா?

ம. மெய்:—ரத்தினப் பெட்டித்தவிர மற்றவைகள் பூட்டப்பட்டிருக்கின்றன.

அரசன்:—(யோசனையோடு) சரி! இரும்! முதல் மந்திரி வரட்டும்.

ம. மெய்:—அரசே! கொஞ்சம் வேலை இருக்கிறது. வீடுவரையில் போய் வந்துவிடுகிறேனே.

அரசன்:—இரும். இதோ முதல் மந்திரி வந்துவிடுவார். பிறகு நீர் போகலாம்.

(முதல் மந்திரி மலைநாட்டுத் திருடனைப்பிடித்துக்கொண்டு தர்பாரில் நுழைகிறான்)

ம. சத்தி:—அரசே! இவன்தான் மலைநாட்டுக் கள்வன். இப்பொருள்கள் அவனிடமிருந்து கைப்பற்றப்பட்டவை!.........இவைகளில் அரசாங்கத்தில் அவ்வாதேசத்து வியாபாரியிடம் வாங்கப்பட்ட ரத்தினங்களில் ஒன்று இதோ இருக்கிறது.

(ரத்தினம் சபையில் வைக்கப்படுகிறது)

அரசன்:—அடே! நீ திருடன்தானா?

திருடன்:—ஆமா!

அரசன்:—இந்த ரத்தினத்தை எங்கே திருடினாய்?

திருடன்:—அரண்மனையிலே.

அரசன்:—எப்பொழுது?

திருடன்:—நேத்து ராத்திரி.

அரசன்:—இந்தக் கல் மாத்திரந்தான் திருடினாயா?

திருடன்:—இல்லை. இத்துடனிருந்த இன்னொரு கல்லையும் சேத்துத் திருடினேன்.

அரசன்:—அந்தக் கல் எங்கே?

திருடன்:—என்னுடன் ஒரு கூட்டாளி வந்தான். அவனுக்கு அதைக் கொடுத்துவிட்டேன்.

அரசன்:—அவன் யார்?

திருடன்:—இந்த ஊர்ன்னு சொன்னான். அவனைத் தெரியாது.

அரசன்:—சரி! இந்தக் கற்கள் கிடைத்த விவரம் சொல்.

திருடன்:—அரண்மனை அறையிலே ஒரு பெட்டியில் மூணு கல்லு இருந்தது. அதிலே ரெண்டே எடுத்துக்கிட்டு...ஒண்ணே வச்சிட்டு வந்திட்டேன். ஒண்ணே நான் எடுத்துக்கிட்டேன். அதுதான் இந்தக் கல்லு. இன்னும் ஒண்ணே எங் கூட்டாளிக்குக் கொடுத்திட்டேன்.

அரசன்:—மூன்று கற்களில் ஏன் இரண்டை எடுத்துக் கொண்டு ஒன்றை வைத்து விட்டாய்?

திருடன்:—மூணு கல்லே ரெண்டு பேருக்கு பங்கு போடுறதின்னா...ஒரு கல்லே ஒடச்சிக்கிட்டு இருக்கணும். அதுக்காகத்தான்...வேண்டான்னு விட்டுட்டுப் போயிட்டேன்.

(அரசன் தன்னிடமிருந்த கல்லை எடுத்துக் காட்டி)

அரசன்:—உன் கூட்டாளிக்குக் கொடுத்தது இந்தக் கல்லுதானா? பார்த்து சொல்.

திருடன்:—(கல்லைப் பார்த்து) ஆமா! இதுதான்.

அரசன்:—மந்திரி சத்தியகீர்த்தி! இவ்விரண்டு கற்களும் நம் ரத்தினங்கள்தானா பாரும்.

ம. சத்தி:—(பார்த்து) ஆம் அரசே! ஆனால்...மூணாவது கல், போன இடந்தான் தெரியவில்லை.

அரசன்:—மூன்றாவது கல்-நம் இரண்டாவது மந்திரி மெய்யறிவார் கையிலிருக்கும்! அவரைச் சோதியுங்கள்.

(மெய்யறிவார் விழிக்கிறார். சோதனை செய்யப்படுகிறார். மடியிலிருந்து ஒரு கல் எடுக்கப்படுகிறது.)

ம-சத்தி:—அரசே! இதோ ரத்தினக்கல்! மெய்யறிவார் மடியில்தானிருந்தது.

(கல்லை அரசனிடம் கொடுக்கிறான்)

அரசன்:—மந்திரி சத்தியகீர்த்தி! களவுபோன கற்கள் மூன்றும் கண்டுபிடிக்கப்பட்டன பார்த்தீரா? நம் தேசத்தில் திருடன் கூட மெய் பேசும்போது நம் மந்திரி மெய்யறிவார் தவறிவிட்டார்! மெய்யறிவாரே! உம்முடைய பேருக்கு மாறாக நீர் தவறிவிட்டீர். மெய்யறிவார் மாறி 'மெய்யறியார்'' ஆனீர். இருந்தாலும் முதல் தடவையானதால் மன்னிக்கிறேன். இன்று முதல் உம்முடைய பெயரைமாற்றி ''பொய்யறியார்'' என்று வைத்துக்கொள்ளும். பெயருக்குத் தக்கபடி இனி நடக்க வேண்டும்! ஏ மலைநாட்டுக் கள்வா! நீ திருடனாக இருந்தும்:

''பொய்யாமை என்ன புகழில்லை யெய்யா
யெல்லா வறமுந்தரும்'' பொய் சொல்லாமல் இருப்பது புகழ். அதுவே எல்லா தருமங்களையும் தரும் என்ற வள்ளுவர் வாக்குப்படி, வாய்மையைக் கடைப்பிடித்ததால், இன்று முதல் நீ நம் அரசாங்கத்தில் ஒரு தளகர்த்தனாக இரு. பொய்யை விட்டதுபோல் மற்ற உன் குற்றமுள்ள செய்கைகளையும் விட்டுவிடு. (கலைகிறார்கள்)

(நிறை)

# கிரௌண்ட் ஆபீசர்களுக்கு

AAA 169

## உத்தியோகங்கள் காலியுள்ளன

28 முதல் 45 வருஷங்களுக்குள் வ்யதான, நல்ல கல்விப் பயிற்சியுடைய ஆட்கள் கம்மீஷன்ட் உத்தியோகங்களுக்கு அவசியம் தேவை. கீழ் வரைந்துள்ள பிரிவுகளில் வேலைகள் காலியுள்ளன :—போட்டோக்கிராபர் (தரை)—ஸிக்னல்ஸ் (ராடார்)—ஸிக்னல்ஸ் (தரை) — எக்விப்மென்ட் — கல்விப்பயிற்சி — இஞ்ஜினியரிங் • கணக்கெழுத்து— மோட்டார் போக்குவரத்து—காரிய நிர்வாகம் (சாதாரணம்)—காரிய நிர்வாகம் (கோடுகளும் சைபர்களும்)

ராயல் இந்தியன் ஆகாயப் படை

ஞாபகமிருக்கட்டும்—ஆர். ஐ. ஏ. எப்புடன் பெறும் அநுபவஞானம் அநேகம் பெயர்களுக்கு, சமாதானம் மீண்டும் வரும் போது, மிகுந்த பெறுமதி யுடையதா யிருக்குமென்பதில் ஆக்ஷேபணையில்லை. ஸிவில் ஸ்தாபனங்களுக்கு நன்கு பயிற்சி பெற்ற உத்தியோகஸ்தர்கள் தேவையாவது மட்டுமின்றி, சர்க்காரும் தங்கள் அதீனத்திலுள்ள அநேக உத்தியோகங்களை யுத்த சேவையினின்றும் விலகினவர்களுக்காக வைத்திருக்க மேற்கொண்டுமுள்ளார்கள்—பின்னும், யுத்தசேவை யுடையவர்களின்—அதாவது அவர்கள் விரும்புவதாகில்—யுத்த பிற்கால தொழிற் பயிற்சிக்கான சட்ட திட்டங்கள் ஏற்கெனவே வகுக்கப்பட்டும் வருகின்றன.

***இவ்வுத்தியோகங்களுக்கு வேண்டிய யோக்கியதாம்சங்களைப்பற்றி பூரா விவரங்களும் கீழ் வரைந்தவர்களிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம்...***

ஸ்டாப் ஆபீஸர் ரிக்ரூடிங்,
கப்பன் ரோட், பெங்களூர்.

ஆர். ஐ. ஏ. எப். ஜி. டி. (விமானிகள்)
ரிக்ரூடிங் ஆபீஸர்
புதுப்பேட்டை லேன்கள்.
மவுண்ட்ரோட், மதராஸ்.

எந்த ரிக்ரூடிங் ஆபீஸர் அல்லது டெக்னிகல் ரிக்ரூடிங் ஆபீஸர் அல்லது காரியதரிசி, மாகாண போர்ட், ஸெனட் ஹவுஸ், சேப்பாக்கம், திருவல்லிக்கேணி, மதராஸ்.





## 12-வது பாசுரம்





கனைத்திளங் கற்றெருமை
கன்றுக் கிரங்கி
நினைத்து முலை வழியே
நின்று பால் சோர
நனைத்தில்லம் சேறாக்கும்
நற்செல்வன் தங்காய்
பனித்தலை வீழ நின்
வாசற் கடைபற்றி
சினத்தினால் தென்னிலங்கைக்
கோமானைச் செற்ற
மனத்துக்கினியானைப்
பாடவும் நீ வாய் திறவாய்
இனித்தானெழுந்திராய்
ஈதென்ன பேருறக்கம்
அனைத்தில்லத்தாரும்
அறிந்தேலோ ரெம்பாவாய்.

## பாசுர விளக்கம்.

[கற்றெருமை-கன்றுகளை உடைய எருமை. பனித்தலைவிழ-பனியானது எங்கள் தலையிலே விழும்படி. தென் இலங்கைக் கோமான்-தென திசையிலுள்ள இலங்கை அரசனாகிய ராவணன். செற்ற-கொன்று ஒழித்த. அனைத்து இல்லத்தாரும் எல்லா வீட்டுக்காரர்களும்.]

"நெடும்போதாக உன் வீட்டு வாசலில் எங்கள் தலையிலே பனி விழும்படி நாங்கள் பஜனை பண்ணிக்கொண்டிருந்தும் நீ வாய் திறக்கவில்லையே! இனியாவது எழுந்து வா" என்று கூப்பிடுகிறாள் பஜனை செய்யும் பெண்மணிகளில் ஒருத்தி. உள்ளே உறங்கிக் கொண்டிருப்பவளை நோக்கி அவர்கள் இப்போது ராம பஜனை செய்கிறார்களாம்.

**ராகம்: கேதார கௌள** **தாளம்: ஆதி**

ஸ ஸா ஸ ஸா — ஸ ஸநி த பா பா——மப தநி பா ப பம கரீ ரீ |

க னை த் தி ள ங் — க—ற் றெ ரு மை — — — க ன் று க் — —— இ ர —— — ங் கி |

மக ஸா ஸா — — ஸ ஸநி த பா பா — — நீ ஸ ரீ ரி பம கரீ ரீ |

நி னை த் து மு——லை——வ——ழி யே——நி ன் று பா ல் சோ—— —— —— ——ர |

ரிம பா பா — பா நீ | ஸா ஸா——ரீக ஸா ஸா —

ந னை த் தி ல் ல ம் — சே — று க் கு ம் — ந ற் செல்வன் —

ஸநீ ரிஸ நித பா , பா | |

தங் —— —— —— — கா ய் |

மப ஸ ஸா — ஸநி ஸா ரி ஸநித பா பா — — தா நி பா —

ப னி த் த லை —— வி —— ழ — — — — —— —— — — நின் — வா — —— — — சற் —

ப பம ம கம ரி — ரிம பா |—

க — — — டை — — — ப ற் றி |—

நி தா ப பா ப ப ம க ரீக ஸா —— ஸரி மா மா பா ப ப |

சி ன த் தி னு ல் தெ ன் னி — — ல ங் கை — — கோ —— — மா —— — னை செ ற் ற |

ரி ம மா ப நி ஸா —— ரீ க ஸா —— ரீ ஸ ஸா ஸா ——

ம ன த் து க் கி —— னி —— யா —— னை பா ட வு ம் நீ ——

ஸ நி ரி ஸ நி தா பா |—

வா —— ய் தி ற வா ய் |—

ப நி ஸா ரி ரீ || ரி ப ம க கா ம ரீ —— ம க ஸா | ஸ —

இ னி தா னெ ழு ந் தி ——— ரா ——— ய் ஈ தெ ன் ன —

ஸ நி நீ ரி ஸ நி தீ பா பா |

பே—— ரு —— ற க் க ம் |

ம ப ஸ ஸா —— ஸ நி ஸா ரி ஸ நி த பா ம ப த நி பா —

அ னை த் தி ல் ல த் தா ——— ரு ம் அ றி ந் தே லோ —

ப ப ம க க ரி —— ரி ம ப நி — ||

ரெ ம் — — பா — வா — ய் — ||

# தர்மாவின் உயில்

தீ. க. நா. சு.



## வக்கீல் ஐயா

★

அன்று காலையில் எழுந்தது முதலே வக்கீல் நாராயணஸ்வாமி ஐயருக்கு என்னவோ போலிருந்தது. அவர் வழக்கத்துக்கு விரோதமாகச் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். "ஏய் காபி கொண்டுவா" என்று சொல்லிவிட்டு ஊஞ்சல் பலகையில் அமர்ந்தவர் அப்படியே வெகு நேரம் உட்கார்ந்திருந்தார். பத்து நிமிஷங்களுக்குப் பிறகு காபி பக்கத்தில் கொண்டு வந்து வைக்கப்பட்டதைக் கூட அவர் கவனிக்கவில்லை. காபி ஆறி ஏடு தட்டிக் கொண்டிருந்தது. அவ்வளவு ஆழ்ந்த யோசனையில் இருந்தார் வக்கீல் ஐயா.

சாதாரணமாக தினசரி சிந்தனையில் ஈடுபட்டிருக்கிற மனிதர் அல்ல நாராயணஸ்வாமி ஐயர். சிந்தனைகளில் ஈடுபட்டும் பொழுதை வீணாக்கிக் கொண்டிருப்பதைவிட சாக்ஷிகளுக்கு பாடம் கற்பித்துக் கொண்டிருப்பது லாபகார்யம் என்பதை அவர் அனுபவ பூர்வமாக உணர்ந்தவர். அதுமட்டுமல்ல சிந்தனைகளோ செய்கைகளோ வாழ்க்கையின் லக்ஷியம் அல்ல; பொருளும் லாபமுமே வாழ்க்கை லக்ஷியங்கள் என்ற கொள்கை உடையவர் அவர். சிந்திக்க வேண்டியதே அனுவசியம்— லாபம் வருவதற்கு நடை முறையில் ஒரு வழி கண்டு கொண்டு விட்டால் அதற்குப் பிறகு சிந்திக்க வேண்டியதே அனுவசியம் என்ற தீர்மானமான அபிப்ராயம் உடையவர்.

அப்படிப்பட்டவர் அன்று தன் லக்ஷியங்களை எல்லாம் மறந்துவிட்டு, மூட்டை கட்டி மூலையில் வைத்துவிட்டு சிந்தனையில் ஈடுபட்டிருந்தார். சிந்தனையிலிருந்து தப்பிவிடத்தான் அவர் முயன்றார். ஆனால் அன்று காலை அவரை மீறிய ஒரு சக்தி அவரைப் பிடித்துஆட்டி வைத்துக் கொண்டிருந்தது. வாசலிலே மூன்று கக்ஷிக்காரர்கள் வந்து காத்திருந்தார்கள் - ஏழு சாக்ஷிக்காரர்கள் வந்து காத்திருந்தார்கள். எல்லாமாகச் சேர்ந்து நாற்பது ஐம்பது ரூபாய் சம்பாத்தியம் அன்றைக்கு காலைப்பொழுதின் வேலையைப் பொறுத்திருந்தது; அதையும் மறந்துவிட்டு, காப்பி கூடச் சாப்பிடாமல் உட்கார்ந்திருந்தார் வக்கீல் நாராயண ஸ்வாமி ஐயர்.

"காபி ஆறிப் போறதே! அதைக்கூடச் சாப்பிடாமே என்ன இன்னிக்கார்த்தாலே?" என்று கேட்டுக்கொண்டு ஊஞ்சலண்டை வந்தாள் அவர் மனைவி ராதை அம்மாள்.

காபி ஞாபகமே அப்பொழுதுதான் வந்தது வக்கீல் நாராயணஸ்வாமி ஐயருக்கு. தொட்டுப் பார்த்தார்—காபி ஜில்லிட்டுப் போயிருந்தது. "சுட வைத்துக் கொண்டுவா. ஆறியே போயிடுத்து."

'நம்பாத்து மாப்பிள்ளை காத்து இங்கேயும் வீச ஆரம்பித்துவிட்டதோ! காபிகூட சாப்பிட நேரமில்லாமே யோசிக்கத் தொடங்கிவிட்டேளே பேஷ்!" என்று சொல்லிக்கொண்டே காபியை எடுத்துக்கொண்டு போய் சுடவைத்துக் கொண்டு வர்தாள் ராதை அம்மாள்.

தன் கணவன் மீண்டும் பழைய படியே உட்கார்ந்திருப்பது கண்டு ஆச்சர்யத்துடன் கேட்டாள் ராதை அம்மாள்; "என்ன! இப்படி எந்தக் கோட்டையைப்

## முன் இதழ்களில்

சிதம்பரத்தில் மாமனார் வீட்டிலிருந்த சிவராமன் புஷ்பப் பல்லக்கில் மேளக் கச்சேரி கேட்டுவிட்டு விடியற் காலை வீடு திரும்பி எழுத முற்படுகிறான். அவன் மனைவி ராஜம் தடை செய்யவே அவன் மனக்கிளர்ச்சியோடு படுத்துக்கொண்ட போது கல்கத்தாவிலிருந்த தன் சித்தப்பா கிருஷ்ணஸ்வாமி சர்மாவைப்பற்றி நினைவு வருகிறது.

குறிப்பிட்ட அதே இரவில் கல்கத்தாவில் கிருஷ்ணஸ்வாமி சர்மா கிளப்பை விட்டதும் மைதானம் போகிறார். அவர் சிந்தனையில் ஆழ்ந்து விடுகிறார். அவர் தம்மரணத்தை அன்றிரவு முற்கூட்டி அறிகிறார் அவர் தம்பி வேங்கடராமய்யருக்கு குழந்தைகளுண்டு. சர்மாவின் மூத்தண்ணா பிள்ளை தான் சிவராமன் பவானி கன்னிப் பருவத்தில் கணவனை இழந்தவள். சர்மாவின் தங்கை பெண் அவள்.

கிருஷ்ணஸ்வாமி சர்மா ஸ்வாமி மலையிலிருந்த சானுப் பாட்டியின் இரண்டாவது பிள்ளை. சானுப் பாட்டிக்கு பிரஸ்தாப இரவில் அதிகாலையில் விழிப்பேற்படுகிறது ஸ்வாமி விளக்கு அணையவே மனக்கலக்கத்தோடு அவள் அதை மீண்டும் ஏற்றி வைக்கிறாள். கல்கத்தாவில் சர்மா "உயில் உயில்" என்று ஏதோசொல்லி முடிக்கு முன் அவர்உயிர்பிரிந்துவிடுகிறதுசென்னையெண்கள் ஹாஸ்டலில்படித்துக்கொண்டிருந்த பவானிக்கு அதே சமயத்தில் தூக்கம் கலைகிறது. சர்மாவிடம் வந்திருந்த கடிதத்தை எடுத்துப்படிக்கிறாள்.

சர்மா இறந்து 7, 8-மாதங்களாகி விட்டன. சிவராமனும், ராஜமும் சென்னையில் குடும்பம் நடத்துகின்றனர். அங்கு பவானி வந்து சேருகிறாள். சிவராமனுக்கும், ராஜம், பவானி இவர்களுக்குமிடையே விவாதம் நடக்கிறது. ராஜத்தின் விஷயத்தில் சிவராமன் கொண்ட மனோபாவம் சரியா தவறா? பவானி விளக்கிச் சொல்லுகிறாள். கல்கத்தாவிலிருந்து வேங்கடராமய்யரும் அவரது மனைவி குழந்தைகள் ஆகியோரும் சுவாமிமலைக்குப்புறப்படுகின்றனர். சிவராமனும் ராஜமும் முன்னவேயே அங்கு போய் விட்டனர். அம்மணிப் பாட்டியோடு சிவராமன் பேசுகிறான். பிரக்ஞை தவறிய சானுப்பாட்டியைக் காண உறவினர்கள் வருகின்றனர். வந்தவர்களோடு சம்பாஷணை நடைபெறுகிறது. சானுப்பாட்டியின் தேகநிலை மோசமாகிக் கொண்டேவருகிறது. கல்கத்தாவிலிருந்து வேங்கடராமய்யர் வருகிறார் சிலதினங்களுள் சானுப் பாட்டி காலமாகிறாள் பவானியின் உள்ளக்கிளர்ச்சிகளும், சிவராமன், ராஜம் இவர்கள் மனோபாவம் வெவ்வேறு மார்க்கத்தில் உருவடையும் தோரணையும மேலே படித்தால் தெரியும்.

பிடிக்கிறதாக யோசனை பண்ணிண்டிருக்கேள்?" என்றாள்.

"ஒரு கோட்டையும் இல்லை. எனக்கு என்னவோ இன்று காலையிலிருந்தே நம்ப ராஜத்தைப்பத்தியே யோசனையாக இருக்கிறது. அந்தப் பெண் இப்படி உலக அனுபவமே இல்லாமல் இருக்கிறாளே—கொஞ்சங்கூட சாமர்த்தியம் இல்லாத பொண்ணாக இருக்கிறதே! அவன் தான் கொஞ்சம் அசடாக இருக்கிறான் என்றால், இவளாவது கெட்டிக்காரியாக இருக்கக் கூடாதா? என்று யோசித்துக் கொண்டிருந்தேன்" என்று தன் மனதிலிருந்ததைக் கூறினார் வக்கீல் நாராயணஸ்வாமி ஐயர்.

ராதை அம்மாமி சொன்னாள்: "என்னமோ எல்லாம் அவாளவாள் அதிர்ஷ்டம்போலத்தான் நடக்கும். நீங்களும் நானும் கவலைப்பட்டு என்ன செய்ய முடியும்? நம்ப கவலைப்படறதுக்காகன்னு எதுவும் மாறிவிடப் போறதில்லை" என்றாள். ஆனால், இந்த வேதாந்த வேகம் தாங்கவில்லை அதிக நேரம். இதைத் தொடர்ந்தே இரண்டொரு விநாடிகளுக்கெல்லாம் அம்மாமியே சொன்னாள்: "என்னவோ நம்ப பொண்ணும் சமத்தாயிருக்கலாம்—மாப்பிள்ளையும் இன்னும் கொஞ்சம் சமத்தாயிருக்கலாம். ஆனால் இல்லையே—என்ன பண்றது?" என்றாள்.

"மாப்பிள்ளையைக் கெட்டிக்காரனில்லேன்னு சொல்றதுக்கும் இல்லை..."

"அது சரி. நேத்திக்கு ரங்காச்சாரியாத்துப் புள்ளே வந்து இவன் எழுதின ஒரு கதையைப் பத்தி இங்கே பிரமாதமாகப் பேசிண்டிருந்தான். பெருமையாகத்தான் இருக்கு. இருந்தாலும்..." என்று இழுத்து நிறுத்தினாள் ராதை அம்மாள்.

"பண விஷயங்களிலே கெட்டிக்காரத்தனம் இல்லாதபோனால் ரொம்பவும் கஷ்டப்படும்படியாகத்தான் போயிடும். இப்ப சத்தியமாகக் கிழவர் இருக்கிறார்—சரிக்கட்டிக்கொண்டு போகிறது கிழவர் தலை சாய்த்து விட்டாரானால் என்னவாகுமோ? யார் சொல்ல முடியும்?" என்று குறைபட்டுக்கொண்டார் வக்கீல் ஐயர்.

"ஒரே பிள்ளை. அருமையாக வளர்த்திருக்கிறார் கிழவர். பணத்தின் கஷ்டமே தெரியாமே வளர்த்திருக்கிறார். ஏதோ அவரால் ஆனது கொஞ்சம் சேர்த்தும் வைத்திருக்கிறார் அவர் என்ன பண்ணுவார் பாவம்!" என்றாள் ராதை அம்மாமி.

"அவருக்கே பண விஷயங்களில் கொஞ்சம் புத்தி கட்டைன்னுதான் சொல்லணும்னு தோணறது. இதோ பாரேன். அவர் தம்பி கிட்டத் தட்ட ஒரு லக்ஷ ரூபாய்க்கு ஆஸ்தி வைத்து விட்டு செத்துப்போய் கிட்டத்தட்ட ஒரு வருஷத்துக்கு மேலேயாகி விட்டது. இன்னமும் அந்த ஆஸ்திகளில் ஒரு பாதியாவது தன் பிள்ளைக்குச் சேர வேணுமே என்ற கவலையே

இல்லாமே, அதைப்பற்றி ஒண்ணுமே செய்யாமல் உட்கார்ந்திண்டிருக்கார்'' என்றார்.

''எங்கே போயிடப் போறது என்று அவசரப் படாமல் இருக்கிறார்'' என்றாள் ராதை அம்மாள்.

''பணம் போறதுக்கா இடங்கிடையாது. கல்கத்தாவிலிருந்து வந்திருந்தாரே வேங்கடராமய்யர்னு ஒரு தம்பி அவர் பலே பேர் வழின்னு எனக்குத் தோணறது. ஏதோ உயில் உயில்னு அண்ணா சாகிறபோது சொன்னான்னு கதை பண்ணிண்டே எல்லாத்தையும் எடுத்துப் பத்திரப்படுத்திண்டிருக்கான்னு எனக்குத் தோணறது,'' என்றார் நாராயண ஸ்வாமி ஐயர்.

''உங்க சம்பந்தி அப்படி ஒண்ணும் அசடில்லே, விட்டு விட்டு ஏமாந்து நிக்கிற ஆசாமியில்லே அவர்,'' என்று சம்பந்திக் கிழவருக்குப் பரிந்து பேசினாள் ராதை அம்மாள்.

''அதென்னவோ ஒரு மனுஷன் செத்துப் போய் ஒரு வருஷம் ஆனப்புறம்கூட அவனுடைய ஆஸ்தியைச் சரியாகப் பங்கு போட்டுக் கொடுக்காமல் இருக்கிறது சரியான காரியமாகத் தோணலே எனக்கு'' என்றார் வக்கீல்.

''நீங்கதான் நேரிலே பார்த்தேனே! அப்ப கேட்கிறதுதானே!''

''கேட்டாத்தான் என்ன? அண்ணா தம்பி இரண்டுபேரும் சிரித்து மழுப்பறான்னு என்னைக் கேலி செய்கிறார்கள். பணமே பிரதானம்னு நான் நினைக்கிறேன்னு. கேட்டேன், கேட்காம விட்டுடுவேனா!'' என்றார் வக்கீல் ஐயர்.

''சிதம்பரத்தில் உட்கார்ந்துண்டு நம்ப இந்தக் கவலை எல்லாம்பட்டு என்னத்துக்காகும்?''

''என்னவோ எனக்கு இன்னிக்கு அதிகாலையிலே விழிப்புக் கொடுத்து விட்டது. விழித்துக் கொண்ட விநாடி முதல் இதுவரையில் இதே விஷயம்தான் என் மனதில் உறுத்திக் கொண்டிருக்கிறது. இன்னிக்கு என்னவோ தெரியல்லே... என்றார் வக்கீல்

''ஏன் வீணா கவலைப்படறேள்? இன்னிக்கி சுவாமி மலையிலிருந்து ஏதாவது கடிதாசு வந்தாலும் வரும்'' என்றாள் ராதை அம்மாள்.

தனது தினசரி காரியங்களைக் கவனிக்க உள்ளே போய் விட்டாள் ராதை அம்மாள். அவள் போன பிறகும் ஓர் ஐந்து நிமிஷங்கள் செயலற்றுச் சிந்தனையில் ஆழ்ந்தவராகவே உட்கார்ந்திருந்தார் வக்கீல் நாராயண ஸ்வாமி ஐயர். ஐந்து நிமிஷங்களுக்குப் பிறகு அவருடைய குமாஸ்தா சோமு வந்து அவருடைய சிந்தனைகளைக் கலைத்தான்.

''ராமசாமி முதலியாரு வந்து காத்திருக்காரே'' என்றான் சோமு

''சித்தே உட்காரச் சொல்லுடா வரேன்''

வக்கீல் ஐயாவுடைய இந்தப் பதில் சோமுவை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. ராமசாமி முதலியார் என்பவர் வாராவாரம் புதுக் கேசு கொண்டு வரும் கக்ஷிக்காரர். முன்னெல்லாம் அவர் வந்துவிட்டார் என்று தெரிந்தால் ஓடோடியும் வரும் வக்கீல் ஐயா இன்று இப்படி ''உட்காரச் சொல் வரேன்'' என்றது அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது. பணத்தின் அருமை பெருமைகளை அறியாதவர் போல அசட்டுத்தனமாக நடந்து கொள்கிறாரே தன் யசமான் என்று வருத்தப்பட்டுக் கொண்டே தன் காரியங்களைக் கவனிக்கப் போனான் சோமு.

மீண்டும் பித்துப் பிடித்தவர் போல ஊஞ்சலிலேயே உட்கார்ந்திருந்தார் வக்கீல். அவருடைய மூத்த பிள்ளை குஞ்சு தூங்கி எழுந்து துக்கத்தால் கலங்கிய கண்களுடன் தட்டுத்தடுமாறிக்கூடத்திற்கு வருவதைப் பார்த்ததும் ''ஏய் குஞ்சு! பல் தேய்த்துக் காபி சாப்பிட்டு விட்டு தபால் பார்த்துக்கொண்டு வாடா,போ'' என்றார்

''தபால் எப்படியும் எட்டு மணிக்கு வந்துடறது. இதுக்கு ஒத்தர் போய் தபாலாபீஸிலே காத்துக் கொண்டு நிற்பானேன்? தபாலாபீஸுக்குப் பக்கத்து வீட்டிலே இருந்து கொண்டு தபால் பார்க்க தினம் ஒருத்தரை விரட்டிக் கொண்டிருப்பானேன்?'' என்று கேட்டுக் கொண்டே மீண்டும் ஊஞ்சலண்டை வந்தாள் ராதை அம்மாள்.

''தபால் ஏதாவது வந்திருந்தால் அதைப் பார்த்தால் தான் எனக்கு ஆறுதலாக இருக்கும். என்னமோ இன்னிக்குக் கார்த்தாலைப் பொழுது பூராவும் ஒரே சஞ்சலமாக இருக்கு'' என்றார் வக்கில்.

''போய்ப் பல் தேய்த்து விட்டு வாடா'' என்று குஞ்சுவை விரட்டினாள் ராதை. பிறகு தன் கணவன் பக்கம் திரும்பிச் சொன்னாள்: 'நீங்க என்னவோ பெரிசா பணம் பணம்னு கவலைப்படறேள், அவாளுக்காக. ஆனால் பெரிய கவலையாக என் மனசிலே இருக்கிறது என்ன தெரியுமா?''

''என்ன?''

''வாயாடி அத்தைக்குக் கெட்டிக்காரப் பொண் ஒண்ணு இருக்கே, அது மாப்பிள்ளையோடும் ராஜத்தோடும் சகஜமாய் பழகறத்தைப்பார்க்கறச்சே தான் என் வயத்தைப் பகீரென்கிறது'' என்றாள் ராதை அம்மாள்.

''படிக்கிற பொண்ணு, அது நாகரிகமாக கூச்சமில்லாமே பழகுகிறது. அவ்வளவுதான்'' என்றார் வக்கீல்.

''அதென்னவோ எனக்கு...'' என்று ராதை அம்மாள் ஆரம்பித்ததும், சிரித்துக் கொண்டே வக்கீல் நாராயணஸ்வாமி ஐயர் சொன்னார்: ''நீ சுத்த கர்நாடகம். உனக்கு ஒன்றும் தெரியாது. என் மாதிரி இல்லாதவாளை எல்லாம் கண்டு நீ பயப்படறே, அவ்வளவுதான்'' என்றார்.

''அவளைப்பற்றிப் பரிதாபமாகத்தான் இருக்கிறது எனக்கும் என்றாலும் கொஞ்சம் பயமாகத்தான் இருக்கிறது'' என்றாள் ராதை அம்மாள்.

''பெண் அழகுதான், புத்திசாலி. கள்ளங்கபடில்லாமே சரிசமானமா எல்லோரோடும் பழகுகிறது. நன்னா படிச்சிருக்கு...'' என்றார் வக்கீல் ஐயர்.

''சரி! இப்படியே சொல்லிக் கொண்டு போனால் நீங்கள்கூட அவள் வலையில் விழுந்துடுவேள் போலிருக்கே!'' என்றாள் ராதை அம்மாள்.

''போடி போ! அவ்வளவுதான் உனக்குத் தெரிஞ்சது'' என்று சொல்லிக்கொண்டே ஊஞ்சலிலிருந்து எழுந்தார் வக்கீல் ஐயர். மற்றது எப்படிப் போனாலும் அவருடைய சிந்தனை மூட்டம் இந்தப் பேச்சால் கலைந்துவிட்டது. இவ்வளவு நேரம் வெட்டிச் சிந்தனையிலும் கவலைகளிலும் பொழுதைப் போக்கிவிட்டது பற்றி வெட்கப்படுகிறவர்போல, ராமசாமி முதலியாரையும் காத்

திருந்த மற்றவர்களையும் கவனிக்கப் போய்விட்டார்

அவர் மனசு சரியாக இராத அன்றைக்கென்று கவனிப்பதற்கும் நிறைய வேலையிருந்தது. அன்றைக்கே எடுத்துக்கொண்டு முடிய இருந்த இரண்டொரு கேசுகள் இருந்தன. இரண்டொரு வியவகாரங்களில் சாக்ஷிகளைத் தயார் செய்து பாடம் ஒப்புவிக்கச் சொல்லித்தர வேண்டியதாகவும் இருந்தது. எல்லோரும் வந்து காத்திருந்தார்கள். இதெல்லாம் போதாது என்று ஊர்ப்பெரிய வக்கீல் பார்க்கவேணும், அவரை அவசரமாக என்று ஆள் வேறு அனுப்பிவிட்டார். தட்டமுடியாமல் ஒன்பதரை மணிக்கு வருவதாகச் சொல்லியனுப்பிவிட்டு மற்ற விஷயங்களைக் கவனிக்கலானார் வக்கீல் நாராயணஸ்வாமி ஐயர். வேலையை ஒத்திவைக்க முடியுமானால் ஒத்தி வைத்திருப்பார். சிரத்தையாகச் செய்யாமல் இருப்பதைவிட ஒத்தி வைத்துவிடுவதே நல்லது என்றுகூட அவருக்குத் தோன்றிற்று.

திடீரென்று இருந்தாற்போல இருந்து வக்கீல் நாராயணஸ்வாமி ஐயருடைய இடதுகண் துடிக்கத் தொடங்கியது. எதற்கும் அஞ்சாமல், பணம் என்ற ஒரு தெய்வத்துக்காக, கேசிலே வெற்றி என்ற ஒரு திருப்திக்காக எதுவும் செய்யத் துணிகிறவர்களுக்குத்தான் குருட்டு நம்பிக்கைகளையும் அதிகமாக அளித்திருக்கிறான் ஈசுவரன். அவர்களுடைய மனச்சாட்சியின்மைக்கு வஞ்சம் தீர்த்துக்கொள்வது போலவே அமைந்துள்ள இந்த நம்பிக்கைகள் எவ்வளவோ கவலைகளைத் தருகின்றன அவர்களுக்கு. ஒரு திருப்திக்கு சரிக்கட்ட ஒன்பது கவலைகள் தலைவிரித்தாடுகின்றன. அவர்களுடைய மன அரங்கிலோ இதுதான் நல்ல வாழ்க்கை, நிம்மதியான வாழ்க்கை என்ற பட்டிலே தங்களைத் தாங்களே திருப்தி செய்துகொண்டு வாழுகிறார்கள். பணம் என்ற லக்ஷியத்தை ஏற்றுக்கொள்ளாதவர்கள அசடர்கள் என்று இவர்களுக்குத் தோன்றுகிறது.

சோமுவைக் கூப்பிட்டார் வக்கீல் ஐயர். 'நம்பகேசு இன்னிக்கி' என்று ஆரம்பித்த ராமசாமி முதலியாரிடம் "இதோ பத்து நிமஷத்திலே உங்க விஷயத்தைக்

கவனிக்கிறேன். வந்துட்டேன்" என்று சொல்லிவிட்டு சோமுவிடம் "தபாலாபீஸுக்குப் போய் தபால் பார்த்துவிட்டு வா" என்றார். அவர் இதைச் சொல்லி வாய் மூடுமுன் "தபால்! என்று கூவிக்கொண்டே தபால்காரன் வந்து பதினைந்து கடிதங்களைக் கொடுத்து விட்டு நகர்ந்தான்.

முதல் கடிதத்தின் தபால் முத்திரை சுவாமிமலை என்றிருந்ததைக் கண்டதும் அதை அவசரம் அவசரமாகப் பிரித்துப் படித்தார். அவருடைய சம்பந்தி பட்டாபிராமய்யர் எழுதியிருந்த கடிதம் அது. பட்டாபிராமய்யர் கடிதங்கள் எழுதுவதே துர்லபம் மிகவும் அவசியமானாலொழிய எழுதவேமாட்டார். எழுதினாலும் ரொம்பவும் சுருக்கமாகத்தான் எழுதுவார்.

இந்தக் கடிதமும் விஷயம் எதையும் தெளிவாக்காமல் மிகவும் சுருக்கமானதாகவே இருந்தது. "தாங்கள் இங்கு வந்து விட்டுப்போனால் தேவலை. இரண்டு நாள் தங்கும்படியாக வரவும். தங்கள் மனைவியையும் உடன் அழைத்து வந்தால் நலம். எல்லோரும் சௌக்கியம், வேறு விசேஷமில்லை" என்று எழுதி விட்டுப் பின் குறிப்பாகப் பின் வருகிறமாதிரி எழுதியிருந்தார்:- "என் தம்பி கிருஷ்ணஸ்வாமி சர்மாவினுடைய உயில் கிடைத்து விட்டது. அது விஷயமாகத்தான் தங்களை வரச்சொல்லி எழுதினேன்."

"அப்பாடி! வேறு ஒன்றும் இல்லையே' ஒரு கவலை விட்டது" என்று சொல்லிக்கொண்டே மற்ற கடிதங்களைப் பிரித்துப் படிக்கலானார். தொழில் விஷயமாக இரண்டொரு கடிதங்கள் வந்திருந்தன. அவற்றைப் பார்த்துவிட்டு, மூன்றாவது கடிதத்தைக் கையில் எடுத்த போது, நாலாவது கடிதத்து விலாஸம் அவர் கண்ணில் பட்டது. அது அவர் பெண் ராஜத்தின் கையெழுத்தாக இருக்கவே பரபரப்புடனேயே எடுத்துப் பிரித்துப் படித்தார்.

வழக்கத்துக்கு விரோதமாகவே ராஜமும் ரத்தினச் சுருக்கமாகக் கடிதம் எழுதியிருந்தாள். "நீ சௌக்கியமா? நான் சௌக்கியம். குஞ்சு சௌக்கியமா, பட்டு சௌக்கியமா, அம்மா சௌக்கியமா? பதில் எழுது. உடனே பதில்" என்றெல்லாம் சுற்றி வளைத்து வழக்கமாகக் கடிதம் எழுதும் ராஜம் மிகவும் சுருக்கமாகவே எழுதியிருந்தாள். "என் மாமனாரும் இன்று உனக்குக் கடிதம் எழுதுவதாகச் சொன்னார் உடனே நீ புறப்பட்டு வரவும். அம்மாவையும் அழைத்துக்கொண்டுவா" என்று எழுதியிருந்தாள்.

ஏற்கெனவே ஒருக் தெரியாத பலவிதமான சிந்தனைகளால் குழம்பிப் போயிருந்த வக்கீல் நாராயணஸ்வாமி ஐயர் மற்ற கடிதங்களைப் பிரித்துக் கூடப் பார்க்காமல் அப்படியே மேசை மேல் போட்டுவிட்டு, 'ஏய்! ஏய்!" என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே போனார். சுவாமிமலையிலிருந்து வந்த இரண்டு கடிதங்களும் அவர் கையில் இருந்தன.

உலைவைத்து அடுப்பிலே அரிசி போட்டிருந்த ராதை அம்மாள் கையில் கரண்டியுடன் "என்ன? கடிதாசு வந்திருக்கா?" என்று கேட்டுக்கொண்டே வெளியே வந்தவள் தன் கணவனின் முகபாவத்தைப் பார்த்தவுடனே திடுக்கிட்டுப் போய் 'ஒண்ணும் கெட்ட செய்தியில்லையே" என்று பதறிக் கேட்டாள்.

அவள் அப்படிப் பதறியதைக் கண்ட வக்கீல் தன் சிந்தனைகளைச் சமாளித்துக் கொண்டு சொன்னார்: "கெட்ட செய்தின்னு ஒண்ணுமில்லை! ஆனால் சம்பந்தி உடனே புறப்பட்டு வரச் சொல்ல எழுதியிருக்கார்" என்றார்.

'ராஜத்திற்கு உடம்புகிடம்பு..."

"அதெல்லாம் ஒண்ணுமில்லை. எல்லோரும் சௌக்கியம்னு எழுதியிருக்கிறார். ராஜமும் கடிதம் எழுதியிருக்கிறாள்" என்றார் நாராயணஸ்வாமி ஐயர்.

"பின்னே என்ன?" என்று கேட்டாள் ராதை அம்மாள்.

"கல்கத்தா தம்பியினுடைய உயில் கிடைத்து விட்டது அது விஷயமாகத்தான் வரச் சொல்லி எழுதியிருப்பதாக எழுதியிருக்கிறார் சம்பந்தி" என்றார் நாராயணஸ்வாமி ஐயர்.

"அப்போ சாயங்காலமே கிளம்பிவிடலாம்" என்றாள் ராதை அம்மாள். "இரண்டு நாள் இருக்கும்படி வரச்சொல்லி எழுதியிருக்கிறார். இன்னிக் காரியத்தைப் பார்த்துவிட்டு நாளைக்கும் நாளன்றைக்கும் இருக்கிறதை ராமசாமி ஐயரிடம் ஒப்பித்துவிட்டுக் கிளம்பிவிடலாம். மத்தியானம் இரண்டரை மணிக்கு வரேன். மூணரைக்கு ரெயில். கிளம்பத் தயாரா எல்லாம் எடுத்து வை" என்று சொல்லிவிட்டு வக்கீல் நாராயணஸ்வாமி ஐயர் கோர்ட்டு வியவகாரங்களைக் கவனிக்கச் சென்றார். (தொடரும்)

# புஸ்தகக்காதலும் புஸ்தகப்பைத்தியமும்



பி. ஸ்ரீ

"புஸ்தக அறிவை நிறையத் தாங்குவது தான் புலமை என்றால், புஸ்தகாலயங்களில் உள்ள அலமாரிகளைக் காட்டிலும் சிறந்த பண்டிதர்களைப் பார்க்க முடியாது!" என்றார் ஒரு நல்லறிஞர். 'அந்தப் புஸ்தகத்தை நான் கரைத்துக் குடித்தேன்; அந்தச் சாஸ்திரத்தைக் கரைத்துக் குடித்து ஏப்பமும் விட்டிருக்கிறேன்!" என்றெல்லாம் பெருமை அடித்துக் கொள்ளும் எந்தப் புலவர்தான் புஸ்தக பீரோக்களைக் காட்டிலும் அதிகமான புஸ்தக அறிவைத் தாங்கி நிற்க முடியும்? "நான் அந்தச் சங்க இலக்கியங்களையெல்லாம்—இன்னும் எத்தனையோ ஏடுகளையெல்லாம்—தோண்டித் துளைத்து ஆராய்ந்திருக்கிறேன்!" என்று பெருமை அடித்துக்கொள்ளும் எந்த ஆராய்ச்சிக்காரன்தான், 'ராமபாணம்' என்ற புஸ்தகப் புழுக்களைப்போல் ஏடுகளையும் புஸ்தகங்களையும் தோண்டித் துளைத்திருக்க முடியும்?

இதனால்தான் கிறிஸ்து வேதமாகிய பைபிளில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது: "பல புஸ்தகங்களை இயற்றுகிறார்கள் முடிவில்லாமல்; அவ்வளவு அதிகப் படிப்பு உடலுக்குச் சோர்வுதான்!" அந்தப் பழைய காலத்துப் புஸ்தக உலகமே இப்படியென்றால், இந்தக் காலத்திலே வரம்பின்றி விரிந்துகொண்டே செல்லும் புஸ்தக உலகத்தைப்பற்றி என்ன சொல்வது?

* * * *

"கண்டது கற்கப் பண்டிதன் ஆவான்!" என்று கண்ட கண்ட நூல்களையெல்லாம் கற்றவர்கள் பழைய காலத்திலும் உண்டு; அப்படிக் கற்று வருகிறவர்கள் இந்தக் காலத்திலும் உண்டு. இந்நாளில் இன்னும் அவசர அவசரமாகப் படித்துத் தள்ளுகிறார்கள். அவசரமாய்ச் சோற்றை விழுங்கி உடம்பைக் கெடுத்துக் கொள்வதுபோல் ஆயிரக்கணக்கான புஸ்தகங்களை மேலெழுந்தவாரியாகப் படித்துவிட்டு, மதிப்புரைகளையும் அங்கும் இங்கும் பார்த்துவிட்டு, ஏதோ அற்புதப் புலமை அடைந்துவிட்டதாக இறுமாந்து திரிகிறார்கள்.

ஓர் அறிஞர் சொன்னார்:—

"சில புஸ்தகங்களைக் கொஞ்சம் ருசி பார்த்தால் போதும்; சில புஸ்தகங்களை விழுங்கிவிட வேண்டியதுதான்; ஆனால் மிகச் சில புஸ்தகங்கள் ஜீர்ணிக்கப்பட வேண்டும்." ஜீர்ணிக்கப்பட்ட உணவும் இரத்தத்தோடு இரத்தமாக வேண்டும்; அங்கத்தோடு அங்கமாக இரண்டறக் கலந்துவிட வேண்டும். புஸ்தகங்களால் கிடைக்கும் மன உணவிற்கும் இதுபோன்ற நியமமுண்டு.

சிலரால் ஐந்து நிமிஷம் கூடப் புஸ்தகமோ, பேப்பரோ இல்லாமல் இருக்க முடியாது. இவர்களுக்குத் தனிமை என்றால் பெரும் பயம்: புஸ்தகத்தின் கொடுங்கோன்மை அப்படி! இத்தகைய வாசகர்களுக்குச் சொந்த அபிப்பிராயம் இருக்க முடியாது. படித்துக்கொண்டே இருந்தால் நினைப்பதற்குத்தான் நேரம் எங்கே? சாப்பாடு வயிற்றை நிரப்புவதுபோல் படிப்பு மனத்தை நிரப்பக்கூடும். ஆனால் நினைப்பே மன உணவை ஜீர்ணிக்கச் செய்யும். ஏகாக்கிரசித்தமும் தியானமும்தான் நம்மை அறிவு மயமாக்கக்கூடும்.

* * * *

"நான் புஸ்தகக் காதலன்; ஆனால் புஸ்தகப் புழுவும் இல்லை; புஸ்தகப் பித்தனும் இல்லை!" என்பதுதான் அறிவாளியின் நிலையாக இருக்க முடியும். "இதனால் புலமை குறைந்து போகுமே!" என்று சிலர் வாதிக்கக் கூடும். "அகல உழுவதிலும் ஆழ உழுவது நன்று" என்பதை உழவன் அறிந்திருப்பதுபோல் அறிஞனும் அறிந்திருக்க வேண்டும்.

ஒவ்வொருவரும் - இதற்கு வசதி உள்ளவர்களைத்தான் சொல்லுகிறேன்—வீட்டிலே ஒரு சிறு புஸ்தகாலயம் வைத்துக்கொள்ள வேண்டும். உண்மையாக அறிவு வளர வேண்டுமென்றால் அந்தப் புஸ்தகாலயத்தில் தேர்ந்தெடுத்து வைத்திருக்கும் புஸ்தகங்களை நன்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அநாவசியமான புஸ்தகங்கள் அப்புஸ்தகாலயத்தில் இடம் பெறலாகாது. அந்தப் புஸ்தகாலயம் ஒரு பொக்கிஷசாலைக்கும் மேலாக—ஏன்? ஓர் ஆலயமாகவே—மதிக்கப்பட வேண்டும்.

சில புஸ்தகங்களைப் பொதுப் புஸ்தகாலயங்களிலிருந்து வாங்கி வாசித்தால் போதும். புஸ்தகங்களை இரவல் வாங்கி வாசிப்பதும், யாசகமாகப் பெறுவதும், திருடுவதுபோல் அவ்வளவு தவறான காரியமல்ல; இந்த வழக்கங்களை மிகவும் மட்டுப்படுத்திக் கொள்வது நலம். பத்திரிகைகள்-மாசப் பத்திரிகைகளாய் இருந்தாலும் கூட-புஸ்தகங்களின் ஸ்தானத்தை அடையத் தக்கன அல்ல. "நினைவில் வைத்துக்கொள்ளப் படிப்பது புஸ்தகம் என்றால், மறக்கப் படிப்பது தினப் பத்திரிகை" என்றார் ஒரு ரஸிகர்.

* * * *

சில புஸ்தகங்களை வேலைக்காரர்களை உபயோகிப்பதுபோல் உபயோகித்துக் கொண்டால் போதும். சில புஸ்தகங்களோ தோழர்களாக மதிக்கத் தக்கன. சிற்சில புஸ்தகங்களைக் குருவாகவும் மதிக்கலாம். திருக்குறள்போன்ற புஸ்தகங்கள் குருவாக மதிக்கத் தக்கன. ஷேக்ஸ்பியர், கம்பன் போன்றவை தோழர்களாகவும் ஆசிரியர்களாகவும் ஒருங்கே அமையத் தக்கவை.

இத்தகைய புஸ்தகங்கள் பிரம்பை நீட்டிப் பயமுறுத்தாத உபாத்தியாயர்கள்! கோப வார்த்தைகளும் இல்லாமல், காசு கேளாமல் அறிவுறுத்தும் ஆசிரியர்கள்! தெரிந்த அறிவை ஒளித்து

வைப்பதில்லை; பரிகாசம் செய்வதில்லை; எப்போதும் விழித்திருந்து பணி செய்யக் காத்திருக்கும் உண்மையான ஆசிரியர்கள் சிறந்த புஸ்தகங்கள்தான்!

இப்படியெல்லாம் புஸ்தக உலகத்தையும் பரிசீலனை செய்து உபயோகித்துக்கொள்ள வேண்டும். சிறந்த புஸ்தகத்திலே ஆசிரியரின் ஜீவநாடி பேசும். அத்தகைய புஸ்தகங்களையே காதலிக்க வேண்டும்; அவற்றிலுள்ள விஷயங்களை ஜீரணம் செய்து கொள்ளவேண்டும்.

* * *

சிலர் ஆங்கில ஆராய்ச்சி நூல்களை அபரிமிதமாகப் படிக்கிறார்கள். இலக்கியத்தைக் காட்டிலும், கவிதையைக்காட்டிலும், ஆராய்ச்சியும் விமர்சனமும் முக்கியம் என்பது இவர்கள் அபிப்பிராயம்போலும். இப்படிப் படிக்கும் விஷயங்கள் உள்ளத்தோடு ஒட்டுவதில்லை; ஞாபக சக்திக்குச் சுமைதான்! இந்தப் படிப்பைக் கொண்டு "குறள் அப்படியில்லை; கம்பன் இப்படியில்லை!" என்றெல்லாம் ஆராயத் தொடங்கி விடுவார்கள். "இலக்கியத்திற்குத்தான் விமர்சனம்; விமர்சனத்திற்காக இலக்கியம் என்பது இல்லை" என்ற இந்தச் சாதாரண விஷயத்தைக்கூட இவர்கள் சிந்தித்துப் பார்ப்பதில்லை.

ரியலிஸம் (Realism) என்ற ஒரு கொள்கை பிரமாதமாக அடிபடுகிறது அல்லவா இலக்கிய உலகில்? "இந்த 'யதார்த்த வாதம்'—உள்ளது உள்ளபடி வர்ணிப்பது—நமது நாட்டுக் கவிதையில் அதிகமாக இல்லை; முக்கியமாகக் கம்ப ராமாயணத்தில் இல்லை" என்று இவர்கள் துணிந்து சொல்லிவிடுகிறார்கள். "மிகைப்படுத்தி வர்ணிப்பது" சரியன்று. வெள்ளை-ஆராய்ச்சியருக்கு அருவருப்பானது-என்பது இவர்கள் அபிப்பிராயம்.

ஆனால் ரியலிஸம் இன்னதென்று இவர்களால் திட்டமாகச் சொல்ல முடியவில்லை. "உள்ளது உள்ளபடி என்றால் புகைப்படம் பிடிப்பதுபோலே" என்று கருதுவோரும் உண்டு. வாழ்க்கையின் நகல்தான் கவிதை, இலக்கியம் என்பது இவர்கள் அபிப்பிராயம். அப்படியானால் அசல் இருக்கும்போது நகல் எதற்கு?—என்று கேட்டு, "வாழ்க்கை போதும், கவிதை வேண்டாம்" என்று முடிவு கட்டிவிடலாமே!

இந்தக் கொள்கையை ஒப்புக்கொள்ளாதவர்கள், "அப்படிப் புகைப்படம் பிடித்துக் காட்ட வேண்டியதில்லை. அங்கங்கே சொல்லப்படும் பொருள் பொதிந்த ஒரு சிறு விஷயம் போதும் கவிச் சித்திரத்திற்கு உயிர் தர. இதைத்தான் ஆங்கிலத்தில் Significant detail என்கிறார்கள்" என்று விவகரிக்கிறார்கள். ஆங்கில இலக்கிய விமர்சகர்களின் கருத்துக்களுக்கு மட்டுமல்ல, சொற்களுக்கும் சொற்றொடர்களுக்கும் அடிமைப்பட்டுத்தான் இப்

படியெல்லாம் ஆராய்ச்சி செய்கிருர்கள்.

புஸ்தகங்களை மேலை நாடுகளிலிருந்து புறப்படப் புறப்படப் படித்துத் தள்ளுகிறவர்களுக்கு ஆழ்ந்த சிந்தனை செய்ய அவகாசம் ஏது? இவர்களுடைய புஸ்தகக் காதல்—'இரவல் அபிப்பிராயங்கள்' மீது இவர்களுக்குள்ள மோகம் — நாளடைவில் ஒருவகைக் காதற் பைத்தியமாகவே முற்றி முதிர்ந்து போகிறது. "பெர்னர்ட் ஷா சொல்லுகிருர்; டால்ஸ்டாய் சொன்னர்; கோல்ரிட்ஜ் சொன்னர்" என்று மேற்கோள் காட்டித் தம் நெஞ்சிலே தோன்றியவாறெல்லாம் அந்த மேற்கோள்களுக்குப் பொருளும் கொண்டு ஏற்கெனவே தாம் கொண்டிருக்கும் அபிமான துரபிமானங்களுக்கு ஆதாரம் தேடுகிருர்கள்!

* * *

புஸ்தக உலகத்திலும் கண்டவாறு திரிந்து அங்கும் இங்குமாகப் பலவேறு அபிப்பிராயங்களைக் கவர்ந்து வைத்துக்கொண்டு, "நான் எவ்வளவு தூரம் அறிந்துவிட்டேன்" என்று கர்வித்துப் பேசுவது சரியன்று. நமக்கு இரவலாகக் கிடைத்த அறிவைக் கொண்டு, மகா கவிகளையும் ஊன்றிப் படியாமல் கண்டிப்பதும் சரியன்று. இத்தகைய குறைகளுக்கு ஒருபெருங் காரணம் மேலை நாட்டு விமர்சன முறைகளிலுள்ள காதற் பைத்தியம்.

சுருங்கச் சொன்னல், புஸ்தகக் காதல் நல்லதுதான் ஆம் நல்ல நல்ல புஸ்தகங்களின் மீது நமக்கு இன்றியமையாத புஸ்தகங்களின் மீது காதல் கொள்ள வேண்டியதுதான். ஆனல் புஸ்தகங்களை நிறையப் படித்துச் சிந்தனைக்கும் நேரம் இல்லாமல் மேலும் மேலும் படித்துக் கொண்டே போகும் பைத்தியம் அவ்வளவு நல்லதுதானு? பைபிள் சொல்லுகிறபடி இத்தகைய படிப்பு உடம்பிற்குச் சோர்வு மட்டுமா? உள்ளத்திற்கும் சோர்வு தரக்கூடியதுதான்!

# ஒரு கேள்வி?



— தி. சு. —

காற்றடிக்கிறது. மரங்கள் திருகித் திருகி விழுகின்றன. பேய்போன்ற காற்று சீறுகிறது. மரங்களும் கட்டிடங்களும் தலை சாய்ந்து விழுகின்றன. புதுப்பேட்டை ஸ்டேஷன் மாஸ்டர் வெங்கோப ராவ் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டிருந்தார். சாரல் அடித்து அடித்து அவர் உடலெல்லாம் தெப்பமாய் இருக்கிறது. பல்லோ "டக் டக்" வென்று தந்தியடிக்கிறது. இரவு மணி 7-30! 7-10-க்கு மெயில் வண்டி வர வேண்டும். மழையில் எங்கு பார்த்தாலும் உடைப்பு. அதற்குள் போர்டர் தடுதடுவென்று ஓடி வந்தான். "சாமி; ரெண்டு கைகாட்டிகளும் விழுந்துபுடிச்சுங்க சாமி" என்றான். ஸ்டேஷன் மாஸ்டருக்கு பகீர் என்றது. சீக்கிரம் வண்டி வந்துவிடும். அதை நிறுத்த வேண்டும். வேறு வழியில்லை. "டேய்! டேஞ்சர் லைட்டை எடுத்துகிட்டுப் போடா! அப்பாலே நின்னுகிட்டு நல்லா காமிடா!" என்றார். அவ்விதமே அவனும் சிவப்பு லைட்டைக் கொளுத்திக்கொண்டு மழையில் நனைந்துகொண்டே கை காட்டி விழுந்த இடத்திற்கு சென்றான். வண்டி வரும் சப்தம் கேட்டது. கடீர் கடீர் என்று வண்டி மட்டும் சப்தம் போடவில்லை. இவன் வயிற்றிலும் "கடபுடா" என்றது. நன்றாக அபாயவிளக்கைக் காட்டினான். என்ன தான் பலமாக ஆட்டி சைகை காட்டினாலும் வண்டி நிற்பதாக இல்லை. ஒரே இரச்சலுடன் கிடுகிடுவென்று தண்டவாளத்தில் சென்று கொண்டேயிருந்தது. என்ன தான் முயன்றாலும் வண்டியை நிறுத்த முடியவில்லை. கண நேரத்தில் வண்டியும் அவனைத் தாண்டிச் சென்றுவிட்டது. ஐய்யோ! அதென்ன கோர சப்தம். வண்டி பாதையை விட்டு விலகி விட்டது. ஏன், என்ஜினே கவிழ்ந்துவிட்டது. 40 பேருக்கு உயிர்ச் சேதம். பலருக்குக் காயம். ஐயோ, பாவம் போர்டரும்தான் என்ன செய்வான்?

கேஸ் தொடரப்பட்டது. ஸ்டேஷன் மாஸ்டர்மீதும், போர்டர்மீதும் குற்றம் சாட்டப்பட்டது. விசாரணை நடந்து கொண்டே இருந்தது.

மாஜிஸ்டிரேட்: வண்டி வரும் போது நீ சைகை காண்பித்தாயா?

போர்டர்: காண்பித்தேன்.

மாஜிஸ்டிரேட்: அதற்கு சாட்சி யார்?

போர்டர்: பார்ஸல் கிளார்க் சாமி!

சாக்ஷியும் விசாரிக்கப்பட்டர். கடைசியில் இருவர் தலையும் தப்பியது.

கோர்ட்டிலிருந்து வெளி வந்ததும் "அப்பாடா? இத்தனை நாழிக்கு எந்த தூக்குமேடை காலியாயிருந்ததோ? தப்பிச்சோம்" என்றார் ஸ்டேஷன் மாஸ்டர் பெருமூச்சி விட்டுக் கொண்டே.

"என்னைமட்டும் மாஜிஸ்டிரேட் இன்னொரு கேள்வி கேட்டிருந்தாரானல் நிச்சயமா நமக்கு தூக்குதான் என்றான் போர்டர்.

"அதென்ன?"

"நீ விளக்கு காட்டுறப்போது விளக்கு எரிஞ்சுகிட்டிருந்ததா? என்கிற கேள்வியை கேட்டிருந்தாரா அவ்வளவுதான், நமக்கு எமலோக பிராப்திதான்! என்றான் போர்டர்.

விஷயம் என்னவென்று புரிகிறதா? போர்டர் விளக்கை காட்டினனேயொழிய அது உயிருடன் எரிகிறதா என்பதை மட்டும் கவனிக்கவில்லை. காற்றடிக்கும் வேகத்தில் விளக்கு அவிழ்ந்து விட்டது. அது அவனுக்குதெரிந்திருந்தால்தானே? நெருக்கடியான கட்டத்திலே நிலை குலைந்து போவதும் அதனுல் ஏற்படும் விபரீதங்களும் அனந்தம். அதில் இதுவும் ஒன்று.

—::—

# புலவரும் போலிப்புலவரும்



— கனல் —

காலம் ஓடிக்கொண்டே இருக்கிறது; அத்துடன் நிலைமையும் மாறிக்கொண்டே செல்கிறது பழமை மறைந்தது; நவீன நாகரிகம் தலை விரித்து ஆடுகிறது. புலவனின் புலமை—உண்மைப் புலமை—அழிகிறது; போலிப் புலவன் பிறரால் அகற்றப்படாமல் வளர்கிறான்—வளர்பிறை போலே.

இம்மாதிரி எவ்வளவோ மாறுதல்கள்! அற்பம் அகண்டம் ஆவதும், அகண்டம் அற்பம் ஆவதும் காலத்தின் கோலம்தானே! ஆனால்,

இதற்கு ஒரு நற்காலமே கிடையாதா? தமிழர் அனைவரும் தழைத்து ஓங்க வழிபிறக்காதா? தமிழன்னையின் கால் விலங்குகள் அகலாதா? தமிழ்க் கொடி எட்டுத் திக்கும் வெற்றி முரசுடன் பிரகாசிக்காதா?

அத்தகைய சிறந்த நிலைமை உண்டாக வேண்டுமானால் புலமையும் தேவை—போலிப் புலமையல்ல. சத்தியமான—நித்தியமான புலமை. அந்நிலையில் சிறந்த புலவர்கள் நாடெங்கும் பெருக வேண்டும்—பழம் புலவர்களின் மதிப்பும் வீரமும் அவர்களுக்கு அவசியம் உண்டாக வேண்டும்.

இனிப் பழங் காலத்திற்குப் போவோம். புலவர்கள் பெருகிய காலம் அது. புவியைப் புலவரே ஆண்டனர்—புரவலர் அல்ல.

கவிதைகள் கண்ணியத்துடன் சிறந்து விளங்கின. கவிஞனைக் காவலன் சிவிகையில் தாங்கினான்.

புலவனின் வார்த்தைகள் பொன்னேபோல் போற்றப்பட்டன. அவன்தான் நினைத்ததை முடிக்கும் சக்தியைப் பெற்றிருந்தான். அவனுடைய எண்ணம்தான் அனைவருடைய எண்ணமும். இத்தகைய காலத்தைத்தான் ஒரு சிறந்த காலமாக பழங் காலமாகக் குறிப்பிட்டது.

## சீத்தலைச் சாத்தனார்

சாத்தனார் என்பவர் ஒரு புலவர். சிறந்த அறிஞர். 'மணிமேகலை' என்ற காவியத்தைச் சிருஷ்டி செய்தவர் அவரே.

அக்காலத்தில் பலர் 'புலவர்' எனப் பெயர் வைத்துக்கொண்டு ஆஷாடபூதி வேலையை அபாரமாகச் செய்து வந்தனர்.

இவர்களுடைய அறிவீனம் சாத்தனாரது பொறுமையையும் சிதைத்து எறிந்தது. அவர்களுடைய பாடல்கள் புலவரது காதுகளில் நாராசம் பாய்வதாகவே இருந்தன.

ஆனமட்டும் அறிவு புகட்டிப் பார்த்தார். பலன் இல்லை. மண்பாண்டங்கள் என்று உணர்ந்தார் புலவர்.

அவர்களை அழிக்கவும் மனம் விரும்பியது. ஜீவ ஹிம்சை செய்ய அவர் துணியவில்லை; தன் ஜீவனையே மாய்த்துக் கொள்ளத் துணிந்தார்.

புலமையில்லாத பாடல்கள் பிறரால் பாடப்பட்டுத் தமது காதில் விழும்போது தலையில் ஓங்கிக் குட்டிக் கொள்வார்; அடித்துக் கொள்வதும் உண்டு. கடைசியாக அவர் கண்ட பலன் தமது தலை புண்ணாகி சீக்கோத்துக் கொண்டதுதான். அதனாலேதான் சீத்தலைச் சாத்தனார் என்று பெயர் வந்தது.

## முப்பெரும் புலவர்கள்

சாத்தனார் சாந்தமாக இருந்துவிட்டுக் காலமானார்; ஆனால் அவருக்குப் பிறகு தோன்றினார்கள் முப்புலவர்கள்-வீரசிங்கம் போல.

போலிப் புலவரை ஒழிக்க வழிதேடினார்; சாம, தான, பேத உபாயங்களால் முடியவில்லை. முடிவில் 'தண்ட' உபாயம் அவர்களால் மேற்கொள்ளப்பட்டது.

போலிப் புலவனைக் குட்டுவான் பிள்ளைப் பாண்டியன் என்னும் கவியரசன்.

காதைக் குறும்பி அளவுமட்டும் குடைந்து தோண்டி, எட்டினமட்டும் அறுத்து அறிவான் வீர 'வில்லி' (வில்லிபுத்தூராழ்வார்) இரண்டு தலைகளை ஒன்றாகச் சேர்த்து முடித்து வெட்டியெறிவான்—பரகாலன் ஒட்டக்கூத்தன்.

பாட்டைப் பார்ப்போம்.

"குட்டுதற்கோ பிள்ளைப்பாண்டியன்
இங்கு இல்லை;
குறும்பி அளவாகக் காதைக் குடைந்து
தோண்டி
எட்டினமட்(டு) அறுப்பதற்கோ
வில்லி யில்லை
இரண்டொன்றாய்த் தலை
முடிந்திட்டு
வெட்டுதற்கோ கவி ஒட்டக்கூத்தன்
இல்லை."

"இவர்கள் எல்லாம் இப்பொழுது இருந்தால் தற்காலத்தில் தற்பெருமை கொள்ளும் போலிப் புலவர்கள் தலையெடுக்க முடியுமா?" என்று இப்பாட்டின் கருத்து கூறுகிறது.

தமிழைக் குற்றம் இல்லாத நிலையில் வளர்ப்பதற்காகக் கொல்லுந் தொழிலையும் மேற்கொண்டார்கள் என்றால் அவருடைய தமிழ்ப் பற்றுதான் எத்தகையது! அரசனும் அவர்களை மதித்து, அவர்களுடைய செயல்களை ஆக்ஷேபிக்காமல் அங்கீகரித்தான் என்றால் அவர்களுடைய பெருமைதான் எப்படிப் பரவியிருக்கிறது! புலவன் புலமைக்காக—தமிழபிவிருத்திக்காக—தன்னுயிரையும், பிறர் உயிரையும் பலி கொடுக்கத் தயாராய் இருந்த அக்காலத்தை நாம் ஒரு சிறந்த காலமாகக் கருதுவதிலும்தான் என்ன தடையுண்டு?

பால்கன்-ஜிபாரி

# ரோஜாப் பெண்

சகோதரன் ஹரி.

ஸலீம் தனிமையாக மைதானத்தில் நின்று கொண்டிருந்தான். கொஞ்ச தூரத்தில், அவன் வகுப்பு பிள்ளைகள் கிரிக்கெட் விளையாடிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் சந்தோஷமாக விளையாடுவதைப் பார்க்கப் பார்க்க ஸலீமுக்கு அழுகை அழுகையாக வந்தது.

ஸலீம் ஏழை. அவனுடைய நிஜார் மிகவும் அழுக்கடைந்திருந்தது. சொக்காயில் பல கிழிசல்கள் இருந்தன அன்று மாத்திரமில்லை. என்றுமே அவன் ஆடைகள் அழுக்கடைந்த கந்தைகளாகவே இருக்கும்.

ஸலீம் இவ்விதம் இருந்ததனுல் அவனுடன் விளையாட யாருக்குமே இஷ்டமில்லை. ஆகையினுலேயே அந்தப் பிள்ளைகள் அவனை கிரிக்கெட் விளையாடச் சேர்த்துக் கொள்ளவில்லை.



ஸலீம் தனிமையாக நின்று கொண்டிருக்கக் காரணம இது தான்.

ஸலீம் அழுது கொண்டே சிறிது நேரம் விளையாட்டைப் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு, இனி அங்கே நிற்பதிற் பயனில்லை என்றெண்ணி அவன் வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தான்

வழியில் ஒரு பூஞ்சோலை இருந்தது. அந்த மாலை வேளையில் அப் பூஞ்சோலை வெகு அழகாக இருந்தது. செடிகளிலெல்லாம் பூக்கள் மலர்ந்து, கம்மென்று மணம் வீசிக் கொண்டிருந்தது.

ஆனுல் ஸலீம் இதையெல்லாம் கவனிக்கவில்லை. கண்களைக்கசக்கிக்கொண்டே அவன் நடந்து கொண்டிருந்தான்.

இப்படி ஒன்றையும் கவனியாமல் இருபதடி நடந்திருப்பான். அப்பொழுது 'ஸலீம்!' என்றொரு இனிமையான குரல் கேட்டது.

இவ்வளவு இனிமையான குரலில் நம்மை அழைப்பது யார் என்றதிசயித்து ஸலீம் திரும்பிப் பார்த்தான். ஒரு ரோஜாச் செடியைத் தவிரப் பக்கத்தில் வேறொன்றையும் அவன் காணவில்லை. அந்தச் செடியில் ஒரே ஒரு பூ மாத்திரம் இருந்தது.

ஸலீம் திரும்பிப் பார்த்ததும் அந்த ரோஜாப் பூ சிரித்தது.

"ஸலீம்! நீ ஏன் அழுகிருய்?" என்று திரும்பவும் இனிமையான குரலில் ஸலீமைப் பார்த்து அந்த ரோஜாப் பூ கேட்டது.

ஸலீம் இதற்கு முன் பூக்கள் பேசிக் கேட்டதில்லை. அதனுல் ரோஜாப்பூ பேசுவதைப் பார்த்ததும் அவனுக்கு அதிசயமும் சற்று பயமும் உண்டாயிற்று.

"ஒருவரும் என்னை க்ரிக்கெட் விளையாடச் சேர்த்துக் கொள்ள மாட்டேனென்கிருர்கள். ஏழை என்று என்னை எல்லோரும் ஒதுக்கித் தள்ளிவிட்டார்கள்" என்று அழுது கொண்டே அவன் ரோஜாவின் கேள்விக்குப் பதிலளித்தான.

"பயப்படாதே, ஸலீம். உன்னுடன் நான விளையாடுகிறேன்" என்றது ரோஜா.

இதைக் கேட்டு ஸலீம் சிறிது மனம் தேறி "நீ எப்படி விளையாடுவாய்?" என்று ரோஜாவைப் பார்த்துக் கேட்டான்.

அதற்கு ரோஜா "ஓஹோ, நன்ருக விளையாடுவேன். இதோ அருகே வந்து என்னைத் தொடு பார்ப்போம" என்றது.

ஸலீம் அப்படியே அருகில் சென்று அதைத் தொட்டான்.

என்ன ஆச்சரியம்! உடனே செடி, மலர், பூஞ்சோலை எல்லாம் மறைந்து விட்டன. ஸலீம் அணிந்திருந்த அழுக்கடைந்த நிஜாரும் கீறிய சொக்காயும் எங்கோ போய் விட்டன. அவன் இப்பொழுது புதிய நிஜாரும் பட்டுச் சொக்காயும் அணிந்திருந்தான். அவன் முன்னே ஒரு பெரிய அரண்மனையும் அதைச் சுற்றி அழகான ஒரு நந்தவனமும் இருப்பதைக் கண்டான. பக்கத்தில் ஒரு சிறுமி நிற்பதையும் பார்த்தான். அவள் முகம் ரோஜா மலரைப்போல வெகு அழகாக இருந்தது.

இவ்வளவையும் ஸலீம் பார்த்தான். அவனுல் தன் கண்களை நம்ப முடியவில்லை. இதெல்லாம் என்னவென்றே அவனுக்கு விளங்கவில்லை. ஆச்சரியத்துடன் அந்தப் பெண்ணைப் பார்த்து,

"பெண்ணே, நீ யார்?" என்று கேட்டான்.

என்னைத் தெரியவில்லையா? ஒரு நிமிஷத்திற்கு முன் தானே நீ என்னைத் தொட்டாய் அதற்குள் மறந்து விட்டாயா?" என்றாள் அந்தப் பெண்.

"நான் ஒரு ரோஜாப் பூவையல்லவா தொட்டேன்" என்று அதிசயித்துடன் கூறினான் ஸலீம்.

"அந்த ரோஜாவே தான் நான். என் பெயர் ரோஜாப் பெண். அதிருக்கட்டும். நீ விளையாட வேண்டுமென்று சொன்னாயல்லவா, வா, தோட்டத்திற்குப் போகலாம்" என்று கூறி அந்தப் பெண் ஸலீமை நந்தவனத்திற்கு அழைத்துச் சென்றாள்.

ஸலீமும் ரோஜாப் பெண்ணும் இருட்டும் வரையில்



நந்தவனத்தில் விளையாடினார்கள். ஸலீம் இதற்கு முன் இவ்வளவு சந்தோஷமாக இருந்ததேயில்லை. ரோஜாப் பெண்ணும் இருந்தது கிடையாது.

நேரம் இருட்டியதும் ஸலீம் ரோஜாப் பெண்ணைப் பார்த்து "ரோஜாப் பெண்ணே, நேரம் இருட்டி விட்டதே. நான் வீட்டிற்குப் போக வேண்டுமே. எப்படிப் போவது?" என்றான்.

இதைக் கேட்டு ரோஜாப் பெண் கலீரென்று சிரித்தாள். "இதுதானே உன் வீடு" என்று அவள் சிரித்துக்கொண்டே சொன்னாள்.

"இது என் வீடா? அரண்மனையல்லவா இது?"

"இல்லை, உன் வீடுதான். அரண்மனையாக மாறியிருக்கிறது. எல்லாம் என் மந்திர சக்தியினால்".

"அப்படியானால் என் அம்மா எங்கே?"

"உன் அம்மா பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறாள்.

வா அவளிடம் போவோம்" என்று ஸலீமின் கையைப் பிடித்து அரண்மனைக்குள் அழைத்துச் சென்றாள்.

போகும்போது ரோஜாப் பெண் "ஸலீம், நீ மிகவும் நல்லவன். உன்னை விட்டுப் பிரிய எனக்கு இஷ்டமே இல்லை. எனக்கும் கூட விளையாடுவதற்கு யாரும் இல்லை. ஆகையால் நாமிருவரும் இந்த அரண்மனையிலேயே இருப்போம்" என்று ஸலீமின் தோளில் கையைப் போட்டுக் கொண்டு சொன்னாள்.

அதற்கு ஸலீம் "எனக்கும் உன்னுடன் இருக்க இஷ்டம் தான்" என்றான்.

மகாராஜாக்களின் அரண்மனைகளைப் போல் அலங்கரிக்கப்பட்டிருந்த பல அறைகளையும் தாண்டி இருவரும் ஸலீமின் தாய் இருந்த அறைக்கு வந்தார்கள். அவள் பிரார்த்தனையில் ஆழ்ந்திருந்தாள். அவளும் நல்ல பட்டாடைகள் அணிந்திருந்தாள்.



சில நிமிஷங்கள் கழித்து அவள் கண்களைத் திறந்தாள். ஸலீமையும் ரோஜாப் பெண்ணையும் சந்தோஷத்துடன் வாரியணைத்துக் கொண்டாள்.

அம்மாவிடம் நடந்ததையெல்லாம் ஸலீம் ஆசையுடன் கூற ஆரம்பித்த பொழுது ரோஜாப் பெண் "எல்லாம் அம்மாவுக்குத் தெரியும், நீ ஒன்றும் சொல்ல வேண்டாம்" என்றாள்.

ஸலீம் அம்மாவை ஆச்சரியத்துடன் பார்த்தான். எல்லாம் அவனுக்கு கனவுபோல் இருந்தது.

அன்று முதல் ஸலீமும் அவள் தாயும் ரோஜாப் பெண்ணுடன் அந்த அரண்மனையிலேயே வசித்தார்கள். பல வருஷங்கள் கழிந்ததும் ஸலீமுக்கும் ரோஜாப் பெண்ணுக்கும் சிறப்பாக விவாஹம் நடந்தது. பிறகு எல்லோரும் சுகமாக வாழ்ந்து வந்தார்கள்.

---

# அம்மாமி விஜயம்

★ நியாயவாதி ★

அன்று சாயங்திரம் ரகு ஆபீஸிலிருந்து விட்டுக்குத் திரும்பிய பொழுது கூடத்தில் ஒரு பெட்டியும் படுக்கையும் வைக்கப்பட்டிருந்ததைக் கண்டான். சமையல் அறையில் அவன் மனைவி பத்மாவுடன் யாரோ ஒருபுதுஸ்திரீ இருந்ததை உணர்ந்த அவன் தன்னறைக்குச் சென்றான்.

சற்று நேரத்துக்குப்பின் பத்மா காப்பி சிற்றுண்டிகளுடன் பிரஸன்னமானாள். அவற்றை சாப்பிடத் தொடங்கிய தனது கணவனிடம் அவள் விஷயத்தைச் சொல்லலானாள்.

"வடக்கேயிருந்து மத்தியானம் அம்மாமி வந்திருக்கிறாள்"

"அப்படியா?" என்று வினவிய ரகு, "நமக்கு உறவினர் யாரும் கிடையாது என்று நினைத்தேன்" என்றான்.

அது வாஸ்தவந்தான். அவ்விளந் தம்பதிகளுக்கு நெருங்கிய பந்துக்கள் யாரும் இருந்ததாகத் தெரியவில்லை. பத்மா தனது நினைவு தெரிந்தது முதல் தனது தாயை அறியாள். அவளது தந்தை இறந்தபொழுது அவளுக்கு வயது ஐந்துநிரம்பவில்லை. பின்னர் அவளை வளர்த்தது அவளது அத்தையும் அத்திம்பேருந்தான். அவர்களுக்கு வேறு குழந்தைகள் கிடையாது. பள்ளிக்கூட உபாத்தியாயராய் எளிய வாழ்க்கை நடத்திய அவள் அத்திம்பேரது சகோதரியின் மகன்தான் ரகு. அவனும் தனது பத்தாவது வயதில் தனது பெற்றோர்கள் இழந்து அனாதையாய்விட்டான்.

இரண்டு அனாதை குழந்தைகளும் ஒரே வீட்டில் வளர்ந்தன. அங்கே பணமும் பண்டமும் அதிகமாயில்லாவிடினும் அன்பும் அமைதியும் நிலவின. ரகு அடக்கமான வாலிபன். பத்மா தங்கமான பெண். அவ்விருவரையும் வளர்த்தவர்கள் அவர்களது விவாகத்தை நடத்திவிட்டு திருப்தியுடன் கண்மூடினர்; தன்னை யாதரித்து வளர்த்த மாமனையும் அவர் மனைவியும் ரகு தெய்வங்களாகவே கருதினான். பத்மாவை தனது வாழ்க்கைத் துணைவியாக அவன் அவர்களிடமிருந்து பெற்றது ஒரு பாக்கியமென்றே கருதினான்.

ரகுவுக்கு ரயில்வே ஆபீஸில் அறுபது ரூபாய் சம்பளம். வேறு சொத்து, வரும்படி ஒன்றும் கிடையாது. எனினும் அவன் அந்த சொற்ப வரும்படியைக் கொண்டு மிகவும் திருப்தியாகவே வாழ்க்கை நடத்தினான், பத்மாவுக்கும் அந்த வாழ்க்கையின் நடைமுறை இனிமையாகவே இருந்தது.

## 2

பத்மாவின் அம்மாமிக்கு வயது நாற்பத்தைந்து இருக்கும். அவள் விதவைக்கோலம் பூண்டிருந்தாள். முகத்தில் பரிபூர்ணமான சாந்தம் குடிகொண்டிருந்தது. எனினும் அவளது ஆழ்ந்த கண்களில் அவள் ஏதோ ஒருகொடிய துக்கத்தை அனுபவித்திருக்க வேண்டும் என்பதின் அறிகுறி இருந்தது. அவள் உடுத்திய நார்மடிப்புடவை அவளது உள்ளத்தின் தூய்மைக்கு அடையாளமாய் இருந்தது. அவளது கழுத்தில் துளசிமணி மாலையைத்தவிர வேறு ஒன்றும் இல்லை.

இப்படி ஆசாரசீலையாய் விளங்கிய அவள்வந்தது முதல் வீட்டில் பத்மாவுக்கு யாதொரு வேலையுமில்லை சமையல் முதல் சாம்பலை எடுத்து சுத்தம் செய்வது வரையில் எல்லாவற்றையும் அவளே செய்து முடிப்பாள். ரகு வீட்டில் இருக்கும்நேரங்களில் அவனுக்கு பணிவிடை செய்வதும் அவனுடன் உல்லாசமாய் இருப்பதும் தான் பத்மாவுக்கு வேலை. மத்தியான நேரத்தில் அம்மாமிதான் கொண்டுவந்திருந்த ராமாயணம், பாகவதம் இவைபோன்ற இதிகாச புராண நூல்களை பக்தியுடன் படிப்பாள். அவற்றை பத்மா பிரீதியுடன் சிரவணம் செய்வாள்.

இப்படி அம்மாமி வந்த ஒரு வாரத்துக்குள் பலவருடங்களாய் பழகினவளைப்போல் ஆய்விட்டாள். அவள் அத்தனை வருடங்களுக்குப் பின் உறவை முன்னிட்டுவந்தது ஒரு பெரிய பாக்கியம் என்று பத்மாவும் அவள் கணவனும் கருதினர். இந்த விஷயத்தை ஒரு நாள் தனிமையிலிருந்தபொழுது பத்மா பிரஸ்தாபித்தாள்.

"அம்மாமி, நீங்கள் இவ்வளவு வருடங்கள் கழித்து வந்தீர்களே! என் கல்யாணத்தின்பொழுது வந்திருந்தால் எங்களுக்கு எவ்வளவோ திருப்தியாயிருக்குமே! என் அத்தைக்கு உறவு மனிதர்களில்லாத குறை இவ்வளவு அவ்வளவல்ல" என்றாள் பத்மா.

அம்மாமி சிரித்தாள். ஆனால் அதில் துக்கத்தின் அறிகுறி இருந்தது. "நான் மிகவும் துரதிர்ஷ்டம் பிடித்தவள் என்னமோ நீ நன்றாயிருக்கவேண்டும் என்பது என் கோரிக்கை" என்றாள்.

"ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்?"

"எனக்கு உன் வயதையொத்த பெண் இருந்தாள். அவளைப்பார்க்கும் பாக்கியத்தை நான் இழந்து விட்டேன்" என்றதும் அம்மாமியின் கண்களில் நீர் பெருகியது.

பத்மாவின் கண்களிலும் கண்ணீர் வழிந்தது. அம்மாமியை நெருங்கி அவளைக் கட்டிக் கொண்டாள். "அழாதேயுங்கள். அம்மாமி, நான்தான் இருக்கிறேனே என்னை உங்கள் பெண்ணாக எண்ணிக்கொள்ளுங்கள்" என்றாள்.

அவளை இறுகத் தழுவிக் கொண்டு தன் மார்புடன் அணைத்துக்கொண்டாள் அம்மாமி. அவளது விம்மலும் ஹிருதய துடிப்பும் அடங்க சற்று நேரம் பிடித்தது. உணர்ச்சி மிகுந்த குரலில் அவள் "கண்ணே! என்ன அக்கிரமம்! பொல்லா விதி தாயையும் மகளையும் பிரித்து விட்டதே!" என்றாள்.

"ஆம்! அம்மாமி, சிறு வயதிலேயே நான் என் தாயை இழந்து விட்டேன்" என்றாள் பத்மா.

"அவளைப்பற்றிய ஞாபகம் உனக்கு ஏதேனும் உண்டோ" என்று கேட்டாள் அம்மாமி.

"இல்லவே இல்லை."

"அவளைப்பற்றி ஏதேனும் கேள்விப்பட்டிருக்கிறாயா"?

"என்னை வளர்த்த அத்தை சொல்லித்தான் தெரியும். என் அம்மா ரொம்பவும் அழகாய் இருப்பாளாம். வக்கீலாய் என் அப்பா சம்பாதித்த பணமெல்லாம் அவளுக்கு நகைகளும் புடவைகளும் வாங்கத்தான் போதுமானதாயிருக்குமாம். நான் மூன்று வயது குழந்தையாயிருந்தபொழுது என் பெற்றோர்கள் வட இந்தியா யாத்திரை போயிருந்தார்களாம். திரும்பி வந்தபொழுது வழியில் பம்பாயில் என் தாய் திடீரென்று விஷஜுரத்தால் இறந்து விட்டாளாம். அவளிடம் என் அப்பா உயிரையே வைத்திருந்தாராம். அவளைப்பறிகொடுத்து விட்டு அவர் திரும்பி வந்து இரண்டு வருடங்கள்கூட உயிருடன் இருக்கவில்லை." அதன் பின் நான் என் அத்தைவீட்டில்வளர்ந்தேன்.

அவளை அன்புடனும் இரக்கத்துடனும் நோக்கிய அம்மாமி சற்று மௌனமாய் இருந்தாள். பின்னர் அவள் "உன் அம்மாவின் நகைகள் உன்னிடம் இருக்கின்றனவா?" என்றாள்.

பத்மா தலையை அசைத்தாள். "அம்மாவை இழந்த விசனத்தில் அப்பா அவற்றைக் கவனிக்கவில்லையாம். அவளது நகைகள் பதினாயிரம் ரூபாய் பெறுமானம் உள்ளனவாம். அவளது நகைப் பெட்டியையே போக்கடித்து விட்டு அப்பா ஊருக்குத் திரும்பினாராம்" என்றாள்.

"ஐயோ! பாவம்" என்று பெருமூச்சு விட்டாள் அம்மாமி.

பத்மாவும் சற்று கலங்கிய மனத்துடன் "அத்தை இறக்கும் வரையில் இந்தக் குறையுடன் தான் இருந்தாள். அம்மாவோடு அவள் போட்டிருந்த நகைகளையும் இழந்துவிட்டாயே!' என்று அவள் என்னிடம் எவ்வளவோ தடவைகள் சொல்லி வருத்தப்பட்டிருக்கிறாள் என்றாள்.

சுவரில் மாட்டப்பட்டிருந்த புகைப்படம் ஒன்றை எடுத்து பத்மா அம்மாமியிடம் காட்டினாள். 'இது தான் என் அம்மாவின் படம். அது எடுக்கப்பட்ட அடுத்த வருடம் நான் பிறந்தேனாம்" என்றாள்.

அம்மாமி அந்தப் படத்தைக் கையில் எடுத்து நோக்கினாள். 'உருவத்திலும் அழகிலும் உன்னைப்போல் இருக்கிறாள் உன் அம்மா. அவள் காதில் வைர ஓலையும் மூக்கில் வைர மூக்குத்தியும், கழுத்தில் வைர அட்டிகையும் கைகளில் நாலைந்து ஜோடி வளைகளும் இடுப்பில் ஒட்டியாணமும் விளங்குகின்றன" என்றாள்.

சற்று நேரம் அம்மாமி யோசனையில் ஆழ்ந்திருந்தாள். பின்னர் அவள் தன் பெட்டியைத் திறந்து அதிலுள்ள ஒரு சிறு பேழையை எடுத்து திறந்தாள். அதில் வைர நகைகளும், தங்க ஆபரணங்களும் இருந்தன. வைரக்கம்மல், வைர அட்டிகை, வைர மூக்குத் திருகு, தங்கச் சங்கிலி, தங்கக் காப்புகள், தங்க ஒட்டியாணம் ஏழெட்டு கல் மோதிரங்கள்—இவை இருந்தன.

பத்மா அவற்றைப் பார்த்து விட்டு பிரமித்து நின்றாள். அம்மாமி அவளை அன்புடன் நோக்கி "நீ வேறு, என் பெண் வேறல்ல, இவற்றை அணிந்துகொள்" என்றாள்.

ஆனால் பத்மா அப்படிச் செய்யவில்லை. சிலநேரம் மௌனமாய் நின்றாள். அம்மாமி பெருகிய வாஞ்சையுடன் "கண்ணே! இவற்றை நீ போட்டுக்கொள்ள மாட்டாயா? இந்த அலங்காரத்துடன் நான் உன்னைப்பார்க்கக் கூடாதா?" என்றாள்.

பத்மா, 'அம்மாமி! நீங்கள் சொல்வதற்காக நான் இவற்றைப்போட்டுக்கொள்ளுகிறேன், ஆனால் அது தப்பு என்று எனக்குத் தோன்றுகிறது" என்று சொல்லிக்கொண்டே அந்த நகைகளை அணிந்துகொண்டாள்.

பத்மாவின் அழகு பன்மடங்கு சோபை பெற்றது. அவளை இமைகொட்டாமல் பார்த்துக் கொண்டே நின்றாள். "கண்மணி உன்னாத்துக்காரர் உன்னை இப்பொழுது பார்த்தால் பூரித்து விடுவார்" என்றாள்.

பத்மா தலையை அசைத்துக் கொண்டே "முதலில் இந்த நகைகளை நான் அணிவதை அவர் ஆக்ஷேபிப்பார்" என்றாள்.

"நான் உனக்கு இவற்றை மனப்பூர்வமாய் கொடுத்துவிட்டால் கூடவா?" என்று கேட்டாள் அம்மாள்.

"அவர் அதற்கு ஒருக்காலும் சம்மதிக்கமாட்டார் என்று பத்மா தலையை ஆட்டினாள்.

## 3

திடீரென்று அம்மாமி ஊருக்குக் கிளம்பி விட்டாள். அவள் அவ்வளவு துரிதமாய் தங்களை விட்டு செல்வாள் என்று பத்மாவும் அவள் கணவனும் எதிர்பார்க்கவில்லை.

மறுதினம் வெள்ளிக்கிழமை. அன்று சாயந்திரம் பூஜை அறையை சுத்தம் செய்து கொண்டிருக்கையில் சுவரில் மாட்டப்பட்டிருந்த மகாலக்ஷ்மி படத்துக்கு அருகேயுள்ள பிறையில் ஒரு சிறு பெட்டியும் அதன் மீது ஒரு கடிதமும் இருந்ததைக் கண்டாள். அப்பெட்டி அம்மாமியின் நகைப் பெட்டி. அதில் அம்மாமி முந்திய தடவை, எடுத்துக் காட்டின நகைகள் எல்லாம் இருந்தன. பரபரப்புடன் கடிதத்தை எடுத்து படித்தாள். அது பின் வருமாறு:—

"என் கண்மணி பத்மாவுக்கு!

நான் வேறுயாருமல்ல. துரதிர்ஷ்டவதியான உன் தாய்தான். என் கதையை முற்றும் உணர்ந்து பின் என்மீது உன் அன்பும் இரக்கமும் வைப்பாய் என்று நம்புகிறேன்.

வட இந்தியா பிரயாணம் செய்துவிட்டு நானும் உன் பிதாவும் பம்பாயில் சில நாட்கள் தங்கினோம். அப்பொழுது பம்பாயில் ஒரு தென்னிந்திய நாடக சபை நாடகங்கள் நடததிவந்தது. அதில் ராஜ பார்ட் நடிகன் ஒரு யௌவன புருஷன். அவன் மீது என் மனம் சென்றது. அவனுடன் நான் சென்னைக்கு ஓடி வந்து விடுவது என்று ஏற்பாடு செய்திருந்தேன். கட்டின புருஷரைத் தாக்க துணிந்த பாவியாய் விட்டேன்.

எனக்கும் அந்த ஓடினவனுக்கும் எப்படி நட்பு ஏற்பட்டது என்பதைப் பற்றி எழுத

எனக்கு விருப்பமில்லை. அவன் நயவஞ்சகன்.

சென்னைக்குப் புறப்படும் ரயிலில்தான் என்னை எதிர்பார்ப்ப தாயும் ரயில்வேஸ்டேஷனில்தான் டிக்கட்டுகளுடன் இருப்பதாயும் அவன் கூறினன். அவனது துர் எண்ணத்தை நான் நிறைவேற்ற பரபரப்புற்றேன்.

உன் தகப்பனருக்கு என் மீது சிறிதேனும் சந்தேகமில்லை. அதனல் நான் வெளிக் கிளம்புவது

எளிதாயிருந்தது. என் நகைகளையும் ஆடைகளையும் ஒரு கைப் பெட்டியில் வைத்துக் கொண்டேன். ரொக்கம் ஆயிரம் ரூபாய் எடுத்துக்கொண்டேன். ஒரு கடிதம் எழுதி மேஜைமீது வைத்தேன். அதில் நான் அவரைத் துறந்துவிட்டு என் மனமொத்த காதலனுடன் கிளம்புவதாயும் என்னை மறந்துவிடும்படியும் குறிப்பிட்டிருந்தேன்.

நான் ரயிலில் இரண்டாவது வகுப்பு வண்டியில் ஏறினேன்.

சற்று நேரம் நான் மௌனமாய் இருந்தேன். பிறகு ஏதோ மறந்தவள்போல், "ஐயோ! என் கைப் பெட்டியை எடுத்து வர மறந்துவிட்டேனே" என்றேன்.

என் காதலனின் முகம் மாறியதும் 'இப்படி அசடாய் இருப்பாய் என்று நான் நினைக்கவில்லை' என்றான் கடுகடுத்த குரலில்.

உடனே எனக்கு உண்மை விளங்கிவிட்டது. அவன் என் மீதல்ல-என் நகைகள் மீதுதான் நாட்டம் வைத்தான் என்பதை நான் அறிந்தபின் எனக்கு ஏற்பட்ட கோபம் இவ்வளவு அவ்வளவு அல்ல.

சென்னை வந்தவுடன் என் பால்ய சினேகிதையிடம் அடைக்கலம் புகுந்தேன். அவள் சிறு வயதிலேயே விதவையானவள். ஒரு அனாதை ஆசிரமம் நடத்தி வருபவள். அவள் என் கதையைக் கேட்டு வருந்தி தன்னுடனே வைத்துக் கொண்டாள். அது முதல் அவளுக்கு உதவியாக அந்த ஆசிரமத்தில் உழைத்து வருகிறேன்.

எல்லாரது கௌரவத்தையும் கருதி உன் அப்பா நான் இறந்துவிட்டதாகக்கூறி உன்னை எடுத்து வந்தார் என்றும் அவர் இறந்தபின் உன் அத்தையிடம் நீ வளர்ந்து வந்தாய் என்பதும் எனக்குத் தெரியும். நான் செய்த பாவத்துக்கு பிராயச்சித்தம் செய்துவிட்டேன். உன் தந்தை என்னை மன்னித்திருப்பார். நீயும் என்னை மன்னிப்பாய் என்று நம்புகிறேன்.

என் பேதமையால் உன்னை இழந்த நான் இந்த ஜன்மத்தில் உன்னைப் பார்க்க ஆவல் கொண்டேன். உன்னுடன் சில நாட்கள் கழித்தும் விட்டேன். இனி என்னிருப்பிடத்திற்குப் போகிறேன். பெட்டியிலுள்ள நகைகள் உன் சொத்து. அவற்றை நீ அணிய வேண்டும். அப்பொழுதுதான் என் ஞாபகம் உனக்கு இருக்கும்.

உன் நிர்ப்பாக்கிய அன்னை

(அம்மாமி.)

---

## "ஆவி சுற்றுகிறது!"

மனைவி:—(வெகுநாளாய் பிடில் வாசிக்காமல், இப்பொழுது எடுத்து வைத்துக்கொண்டு) "முன்னே வாசித்த காம்போஜி ராகக் கீர்த்தனைமட்டும் என் மனதைவிட்டு அகலாமல், சுற்றி, சுற்றிக்கொண்டே யிருக்கிறது!"

புருஷன்:—"சரிதான், நீ அதைக் கொலை பண்ணி யிருப்பாய்! அதான் இப்படி ஆவியாக அது உன்னைச் சுற்றுகிறது!

---



யுத்தக் குற்றவாளிகளை விசாரிப்பதற்காக உத்தேசிக்கப்பட்டுள்ள விசாரணை சபையில் அமெரிக்காவின் சார்பாக நியமிக்கப்பட்டிருக்கும் ஜஸ்டிஸ் ராபர்ட் எச். ஜாக்ஸன். புதிய அமெரிக்கத் தலைவர் மிஸ்டர் ட்ரூமன் இந்த நியமனத்தைச் செய்தார்.

—'யுஸோவி'



ஆகினாவாவின் தலை நகர் நாஹா. அந்நகரத் தெரு வழியே முன்னேறும் யு. எஸ். டாங்கியும் யு. எஸ். வீரரும்.



கிராண்ட் அட்மிரல் டோஸிட்ஸும் அவருடைய 'சர்க்காரின்' அதிகாரிகளும் கைது செய்யப்பட்ட காட்சி.

—ரேடியோ போட்டோ.

# காங்கிரஸ் மகாசபை
# சரித்திரம்

★

## பாரத நாட்டின் சுதந்திர சரித்திரம்!!



| | | | |
|---|---|---|---|
| முதல் பாகம் | விலை | ரூ. | 2. |
| இரண்டாம் பாகம் | ,, | ரூ. | 2. |
| மூன்றும் பாகம் | ,, | ரூ. | 2. |

(தபால் செலவு 0—13—0)

**மூன்று பாகங்களையும் ஒரே தடவையில் வாங்கும்**
**சந்தாதாரருக்கு ரூ. 4.**

**மூன் பணம் அனுப்பவேண்டும். V.P.P. அனுப்புவது கிடையாது.**



இன்னும் இதர புத்தகங்களும் கிடைக்கும்.
புத்தக ஜாபிதாவுக்கு எழுதவும்.

எமது எல்லா புத்தகசாலைகளிலும் கிடைக்கும். நேரில் விஜயஞ்செய்து தேவைக்கு ஆர்டர் செய்யவும். எல்லா 'மித்திரன்' ஏஜெண்டுகள் மூலமும் பெற்றுக் கொள்ளலாம்.

---

மானேஜர்,
## சுதேசமித்திரன் புத்தகசாலை,
மவுண்ட் ரோடு : : மதராஸ்.

Printed and Published by T. S. Visvanatha Iyer, B. A. at the "Swadesamitran" Power Press Mount Road, Madras. *Editor*:-C. R. Srinivasan, B.A.